

# பாலசந்தர் வீட்டுக் கல்யாணம்

காலையில் முதலமைச்சர் எம். ஜி. ஆர். வந்திருந்து மணமக்களை வாழ்த்தினார் என்றால் மாலையில் கலைஞர் கருணாநிதி மணமக்களை வாழ்த்த வந்திருந்தார். ஜெயலலிதா கலைஞர் வந்த மறு நிமிடமே கிளம்பி விட்டார்!

திரை உலகமே திரண்டு வந்திருந்தது என்று கூறலாம்.

பாலசந்தரின் பெண் செல்வி புஷ்பலதாவுக்கும் செல்வன் கந்தசாமிக்கும் சென்னை ஏ. வி. எம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் விமரிசையாகத் திருமணம் நடந்தது.

பாலசந்தர் இல்லை என்றால் இன்று திரை உலகில் உள்ள பல கதாநாயகர்கள், கதாநாயகிகள் இல்லை. இதை உணர்த்துவதே போல் ஏ. வி. எம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் உள்ள ஏ.ஸி. டைனிங்ஹாலில் வருபவர்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை விசு, எஸ். வி. சேகர் தாங்களே ஏற்றனர். வாசலில் வருபவர்களை வரவேற்க ராஜீவ், ரவீந்தர், திலீப் காத்திருந்தனர். பெண்கள் பகுதியில் வாணி கமலஹாசனும், சரிதாவும் பூந்தட்டுகளுடன் மாலை 6 மணியிலிருந்து 9 மணி வரை நின்றனர்.

காலையில் சரிதாவின் வேலை முகூர்த்தத்துக்கு வந்து செல்பவர்களுக்குத் தாம்பூலம் கொடுப்பது. ரஜினிகாந்த் காலை வந்திருந்து பல மணி நேரம் உட்கார்ந்திருந்தார். ஆனால் கமலஹாசன் முகூர்த்த நேரத்தின் போதுதான் வந்தார். காரணம், 'கரிஷ்மா' என்ற ஹிந்தித் திரைப்படத்தில் (டிக் டிக் டிக் படத்தின் ஹிந்தி வடிவம்) நடிப்பதற்காக 15அடி உயரத்திலிருந்து கீழே குதித்தாராம். வலது காலில் கட்டுப்போடப்பட்டுள்ளது. எலும்புமுறிவா அல்லது தசைநார்கள் பிசகிக் கொண்டு விட்டனவா என இன்னும் தீர்மானிக்காத நிலையில் இந்தக் கட்டுப் போடப்பட்டுள்ளது. எப்படி நடந்தது என யாராவது வருத்தத்துடன் கேட்டால் சிரித்துக்கொண்டே ''30 அடி உயரத்திலிருந்தெல்லாம் குதித்திருக்கிறேன். ஒன்றும் ஆகவில்லை. 15 அடி உயரம் குழந்தை கூடக் குதிக்கும். இதில் போய் இப்படிச் சிக்கல் ஏற்பட்டுள்ளது'' என்றார் கமல்.

மாலை பாலமுரளி கிருஷ்ணாவின் இன்னிசைக் கச்சேரி. மிகச் சிறப்பாக நல்ல மூடில் பாடிக் கொண்டிருந்தார். கல்யாணத்தில் கச்சேரியை யார் கேட்பார்கள் என்று தோன்றும். ஆனால் பாலமுரளி பெரும்பாலோரை வசப்படுத்திக் கொண்டார். அவர்களில் தலையை ஆட்டி வெகுவாக ரசித்துக் கொண்டிருந்த இருவர் வாணி ஜயராமும், அவரது கணவரும்.

சாப்பிடச் சென்ற இடத்தில் ஒருவர் ஓடி வந்தார். ''இரண்டு இடங்களை ரிசர்வ் செய்யுங்கள் சார்! சுஜாதாவும் பாலு மகேந்திராவும் வருகிறார்கள்'' என்றார். இரண்டு வாண்டுகள் நடிகை சுஜாதாவிடம் ஆட்டோகிராப் வாங்கத் தங்கள் பேனாவைத் தயாராக வைத்திருந்தார்கள். ஆனால் வந்தது பாலு மகேந்திராவும் எழுத்தாளர் சுஜாதாவும். ஆட்டோகிராப் போட்டார்கள்.

படப் பிடிப்பை அனுசரித்துப் பலர் காலையிலோ மாலையிலோ வந்து போனார்கள். ஆனால் இந்தத் திருமணத்துக்காகவே ஒரு நாள் படப்பிடிப்பை ரத்து செய்தவர் எஸ். பி. முத்துராமன். அவரது படத்தின் கதாநாயகன் ரஜினிகாந்த்.

—சலன்





○ சீனிவாசன் ○ செல்வகணேஷ் ○ சாவித்திரி ○ சுமதி

# அமில மழை பொழிகிறதாமே!

**[லயோலா கல்லூரியில் பயிலும் திரு. பி. ஆர். சீனிவாசனும், திரு. பி. செல்வ கணேஷும் ஒரு குழுவாகவும், மீனாட்சி பெண்கள் கல்லூரியில் பயிலும் செல்வி கே. சாவித்திரியும் செல்வி ஏ. வி. சுமதியும் மற்றொரு குழுவாகவும் இருக்க முதல் கேள்வியை லயோலா கல்லூரி மாணவர் செல்வகணேஷ் கேட்கக் 'குவிஸ்' ஆரம்பமாகியது.]**

செல்வ கணேஷ்: ஹைதராபாத் விமான நிலையத்தின் பெயரென்ன?

(மீனாட்சி கல்லூரி மாணவிகள் யோசித்து விடை கூற முடியாமல் இருக்கின்றனர். செல்வ கணேஷ் பதில் சொல்கிறார்.)

செ. க.: பேகம்பெட்.

சாவித்திரி: முதலைக் கண்ணீர் என்ற சொற்றொடர் வருவதற்குக் காரணம் என்ன?

(லயோலா கல்லூரி மாணவர்கள் சொல்வது தவருகவே பதிலைக்கேள்வி கேட்டவரே சொல்கிறார்.)

சாவித்திரி: முதலைக்கு வேர்வை கண்களின் வழியாகத்தான் வெளி வருகிறது. அது உண்மையான கண்ணீர் அல்ல. ஆகவே போலியாகக் கண்ணீர் விடுபவர்களை முதலைக் கண்ணீர் வடிக்கிறார்கள் என்று சொல்கிறோம்.

அடுத்த கேள்வியை சீனிவாசன் கேட்கிறார்.

கேள்வி: அடுத்த காமன்வெல்த் விளையாட்டு எங்கே நடைபெறப் போகிறது?

(மீனாட்சி கல்லூரி மாணவிகள் பதில் சொல்ல முடியாமல் தவிக்க சீனிவாசனே பதிலைச் சொல்கிறார்.)

பதில்: ஸ்காட்லெண்டில் உள்ள எடின்பரோ நகரத்தில்.

சுமதி கேள்விக்கணையைத் தொடுக்கிறார்.

கேள்வி: கதிர் வீச்சை (Radio Activity) அளக்கும் கருவியின் பெயர் என்ன?

(சற்றும்தாமதிக்காமல் பதில் சொல்கிறார் செல்வ கணேஷ்.)

பதில்: கைகர் கவுண்டர் (Geiger Counter) ஜெர்மானிய விஞ்ஞானியின் பெயர் சூட்டப்பெற்ற கருவி.

(அடுத்து சினிமாத் துறையைப் பற்றிய ஒரு கேள்வியை வீசுகிறார் சீனிவாசன்.)

கேள்வி: எம். ஜி. ஆர். நடித்துக் கடைசியாக வெளிவந்த திரைப்படம் என்ன?

(சுமதி டக்கென்று பதில் சொல்கிறார்.)

பதில்: மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன்.

சாவித்திரி கேள்விக் கணையைத் தொடுக்கிறார்:

கேள்வி: கந்த சஷ்டி கவசத்தை இயற்றியவர் யார்?

(செல்வ கணேஷும் சீனிவாசனும் முழிக்க, பதில் சாவித்திரியே சொல்கிறார்.)

**பொது அறிவுப் பக்கம்**

பதில்: தேவராய சுவாமிகள்

அடுத்து...

செ. கணேஷ்: உலக ஒலிம்பிக் கமிட்டியின் தலைவர் யார்?

(பதில் தெரியாது முழிக்கின்றது எதிர் டீம். செ. கணேஷ் பதில் சொல்கிறார்.)

பதில்: ஜுவான் அன்டோனியோ சமரன்ச் (JUAN ANTONIO SAMARANCH)

மீனாட்சி கல்லூரி மாணவிகள் அடுத்த கேள்வியைக் கேட்கின்றனர்.

கேள்வி: சுருக்கெழுத்தை (Shorthand) கண்டுபிடித்தவர் யார்?

செ. கணேஷ்: பிட்மன்.

சீனிவாசன் கேள்வி தொடுக்கிறார்:

கேள்வி: ஆஸ்திரேலியாவில் தொழிலாளர் கட்சி பதவிக்கு வந்துள்ளது. புதிய பிரதமர் பெயர் என்ன?

(எதிர் டீம் சொல்லத் தவிக்கிறது.)

சீனிவாசன்: பாப் ஹாக் BOB HAWKE

'நீங்களே கேள்வியைக் கேளுங்கள்' என்று எதிர்க் கட்சிக்குச் சவால் விடுகிறார்கள் மாணவர்கள்.

சாவித்திரி கேட்கிறார்:

கேள்வி: சந்திரனிலிருந்து பார்த்தால் பூமியில் தெரியும் முக்கியமான புராதனச் சின்னத்தைக் கூற முடியுமா?

(செல்வ கணேஷிடமிருந்து டக்கெனப் பதில் வருகிறது.).

பதில்: சைனாவில் உள்ள நீண்ட மதில் சுவர் (Great Wall of China) மாணவர்கள் அடுத்த கேள்வியை வீசுகிறார்கள்.

கேள்வி: கடைசியாக ஞானபீட பரிசைப் பெற்ற தமிழ் எழுத்தாளர் யார்?

(சாவித்திரி உடனே பதில் சொல்கிறார்.)

பதில்: அகிலன்.

மாணவிகள் 'நீங்கள் கடைசி கேள்வியாக ஒன்றைக் கேளுங்கள்' என்று கூற சீனிவாசன் கேட்கிறார்.

கேள்வி: 'அமில மழை (Acid Rain) பற்றிச் சொல்ல முடியுமா?

(மாணவிகள் முழிக்கிறார்கள். சீனிவாசனே பதில் சொல்கிறார்.)

பதில்: அமெரிக்காவுக்கும் கானடாவிற்கும் இடையே எல்லைக்கருகில் உள்ள அமெரிக்க தொழிற்சாலைகள் வெளியே விடும் விஷப் புகை வானில் பரவி மழையைப் பொழியும் மேகத்தில் ஊடுருவி. அந்த மேகங்கள், கனடாவில் போய் மழையைக் கொட்டுகின்றன. அந்த மழை நீர் அமிலத் தன்மைமிகுந்து காணப்படுகிறது. இந்தப் பிரச்னை இரண்டு அரசுகளுக்கும் இடையே ஒரு சச்சரவாக வளர்ந்து வருகிறது.

[அதிக மதிப்பெண் பெற்று வென்ற லயோலா கல்லூரி மாணவர்களுக்கு கல்கி நிறுவனம் 30 ரூபாய் சன்மானம் வழங்கியது. கலந்து கொண்ட நான்கு மாணவ, மாணவியருக்கும் புத்தகப் பரிசுகளும் கிடைத்தன.]

ஏற்பாடு: ப்ரியன்—மௌலி

படம்: ஸ்பைடர்





# எல்லையில்லா அன்பு



பல வீடுகளில் நாய்க் குட்டி அல்லது பூனைக்குட்டி வளர்க்கிறார்கள். அதற்குச் சிறிது கஷ்டம் வந்து விட்டாலும் தங்களுக்கு ஒரு கஷ்டம் வந்ததுபோலவே எண்ணிக் கொண்டு அதற்குப் பலவித மாக உபசாரம் செய்வித்து வளர்த்து வருகிறார்கள். இது ஒரு வகையான அன்பு!

ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகளைக் கொஞ்சுவது, அலங்காரம் செய்து மகிழ்வது, அந்தக் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டு ஆனந்தப் படுவது, செல்வமாகத் திட்டிக் கொஞ்சுவது போன்றவையும் அன்பு காரணமாகப் பிறக்கும் செயல்களே.

தாய் தந்தையரிடம் மரியாதையுடன் நடந்து கொள்வதும் அவர்களுக்கு வேண்டியதைச் செய்து கொடுப்பதும் தனக்கு இஷ்டமில்லா விட்டாலும் அவர்களைத் திருப்தி செய்ய அவர்கள் விருப்பப்படி நடந்து கொள்வதும், வயது முதிர்ந்த காலத்தில் அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்வதும், அவர்கள் இறந்து போன பிற்பாடு வருந்துவதும் எல்லாம் அன்பு என்ற சக்தியின் விளைவாகத்தான்.

தனக்குப் பிரியம் இருந்தாலும் இல்லா விட்டாலும் தன் மனைவிக்காக – அவளுக்கு மகிழ்ச்சியைத் தரும் என்பதை உணர்ந்து அதற்காகத் தன் குடும்பச் சொத்துக்களைத் தாராளமாகச் செலவழிப்பதும்; தன் மனைவி தன்னைத் தவிர வேறு யாரையாவது விரும்பு கிறாள் என்று தெரிந்தால் உள்ளத்தாலும், உடலாலும் வெகுண்டு எழுதலும் அன்பினால் தான்!

அன்பு என்ற குணம் ஒன்றாக இருந்தாலும் அதன் விளைவான காரியங்கள் ஒவ்வொரு நேரத்தில் ஒவ்வொரு மனிதரிடம் ஒவ் வொரு விதமாகச் செயல்படுகிறது. கோபம் போன்ற மற்ற உணர்ச்சிகள் பொங்குவது கூட நாம் அன்போடு நினைத்தபடி நடக்க வில்லையே என்ற வேகம் காரணமாகத்தான்.

அன்பு வேறு காமம் வேறு. காமம் என்பது உடம்பு அழகை வைத்து மாத்திரம் மோகிப் பதால் வருவது. அன்பு என்பது உடம்பு, உள்ளம், நடவடிக்கைஅனைத்தையும்வைத்துப் பிறக்கிறது. அன்பிலே பாரம்பரியம் உண்டு. அதாவது பரம்பரையாக வருபவர்களிடம் அன்பு செலுத்துவது. 'ஓ! இவன் இன்னாரு டைய பிள்ளையல்லவா!' என்று அறிந்ததுமே ஒருவனிடம் அன்பு உருவாகிறது.

பிராணிகள் முதல் இறைவன் வரை எல்லோரிடமும் . அன்பு செலுத்தப் பழக வேண்டும். ஒருவரிடமும் அன்பு காட்டாமல் இருப்பவன் – அன்பு தோன்றாமல் இருப்ப



வன் மனிதனே அல்ல. அன்புக்கு எடுத்துக் காட்டாக விளங்கியவர் சிபிச் சக்கரவர்த்தி. தன்னிடம் அடைக்கலம் புகுந்த புறாவை இராஜாளியிடமிருந்து மீட்கத் தன் னையே தியாகம் செய்த பெருமையெல்லாம் அன் பினால்தான். அன்பைப் பற்றி திருவள்ளுவர் ஒரு அதிகாரமே எழுதி யிருக்கிறார்.

ஆண்டவன் அன்பே உருவானவர். அவ ரிடம் நாம் காட்டும் அன்பு நமக்கு அவரது அன்பைப் பெற்றுத் தரும். இராமனிடம் குகன் செலுத்திய தூய அன்பு அவனுக்கு இராமனின் பேரன்பைப் பெற்றுத் தந்தது. அந்தப் பேரன்பு குகனைத் தன் சகோதர னாகவே ஏற்றது. எப்பேற்பட்ட பாக்கியம்! ''முன்பு நாங்கள் நால்வராய் இருந்தோம்: முடிவு காண முடியாத அன்பை உடைய குகனே! இனி நாம் ஐவரானோம்!'' என் றல்லவா கூறினான் சக்கரவர்த்தித் திருமகன்!

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய
சுவாமிகள்

# இந்தியசமய



✕ மலர்க் கிரீடத்தில் மலரும் சிரிப்பு



✕ கௌரிசங்கர் ஸ்தபதிக்கும் பாராட்டு

● அரசியல் ஊர்வலங்களைப் பார்த்துச் சலித்த சென்னை வாசிகளுக்குக் காஞ்சிப் பெரியவர் ஆசியுடன் நடந்த ஊர்வலம் வித்தியாசமாகத் தெரிந்தது. ''வாழ்க'', ''ஒழிக'' கோஷம் கிடையாது. போலீஸாருக்கு வேலை இல்லை. திருவிழா மாதிரி தீவுத் திடல் முதல் தேனாம்பேட்டை வரை ஒரே கலகலப்பு. பெரியவர் துவக்கி வைத்த போது ஆவடி போலீஸ் படையைச் சேர்ந்த ஒருவர் தம் தலையிலேயே தேங்காய் உடைத்தார். பெரியவர் கண்களை இறுக்கிக் கொண்டார்!



✕ முதல்வர் எம். ஜி. ஆருக்கும் பிரசாதம்

# கலாசார கலைவிழா

● ஐந்து நாள் விழாவில் முதல் நாள் குழந்தைகள் தினம். ம. பொ. சி. பேசிய போது விழாவில் நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்கள்தான் காணப்படுவதாகவும் இளைஞர்களைக் காணோம் என்றும் குறைப்பட்டார். இளைஞர்கள் இளைஞர் தினத்துக்காகக் காத்திருக்க; 40 வயதுக்கு மேலானவர் தம்மைக் குழந்தைகளாகப் பாவித்துக்கொண்டதில் வியப்பில்லையே! ம. பொ. சி. வந்த தினம் எப்படியாயினும் பொதுவில் ஏராளமான இளைஞர்களை ஈர்த்தது இவ்விழா.

● உலகில் உள்ள ஒரே இந்து ராஜ்யமான நேப்பாளத்திலிருந்து அரசர் பிரேந்திரா அனுப்பின ஐந்து பிரதிநிதிகள் வந்திருந்தனர். ரோஸ் கலர் குல்லா அணிந்து முகமெல்லாம் மகிழ்ச்சியாய்க் காணப்பட்டார்கள். இவர்களுள் ராஜகுரு ஸம்ஸ்கிருதத்திலேயே பேசினார்.

● மாணவர்களுக்காகப் போட்டிகள் நடத்தப்பட்டன. பலவற்றில் பார்வையற்ற மாணவரும் கலந்து கொண்டு எல்லாருடைய இதயங்களையும் முழுமையாக ஆக்கிரமித்தனர்.

● கேரள ஆளுனர் பா.ரா.வை ம.பொ.சி. ''அர்த்தநாரி'' என வர்ணிக்க பா.ரா.வே சிரித்து விட்டார் எனில் மற்றவர் பற்றிக் கேட்பானேன்!

● 'அப்பா' என்று அன்புடன் அழைக்கப்பட்டு ஜாதி மத பேதமின்றி எல்லோராலும் வணங்கப்படுகிற கெனரி சங்கர ஸ்தபதிக்குப் பெரியவர் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.

● நாதஸ்வரம் வாசித்தது ஷேக் சின்ன மௌலானா சாகிப்; பேச்சாளரில் ஒருவர் வலம்புரி ஜான்; பந்தல் அமைப்பு முஸ்லிம் சகோதரர்கள் என்றிப்படி மத ஒருமைப்பாடு விழாவாகவே நடந்தது.

● மகளிர் தினத்தன்று பெண்களுக்குச் சட்டப் பாதுகாப்பு பற்றி அனந்தநாயகி அலச, வேறு பிரச்னைகள் பற்றிப் பல பெண்கள் சொற்பொழிவாற்ற, குமாரி மீனா குடிப்பழக்கம் உள்ளோரை வெறுத்து ஒதுக்காமல், பரிவுகாட்டித் திருத்த முயல வேண்டும் என்று பேசியது வித்தியாசமாய் இருந்தது.

● எல்லா நாட்களும் பெரியவர் அருளுரை உண்டு. இளைஞர் தினத்தன்று, ''நமது பண்பாடு ஒரு ஜெனரேட்டர் போன்றது. மின்வெட்டினால் இருள் சூழ, ஜெனரேட்டர் உதவியால் ஒளி பெறுவது போல், உலகில் ஒரு பக்கம் அபரிமித வளமையும் மறுபுறம் கொடிய வறுமையும் காரணமாக இருள் சூழும்போது நமது ஜெனரேட்டரிலிருந்து புறப்படும் ஆன்மிக ஒளி இருளை விரட்டும்!'' என்றார்.



✕ பழங்கோலம்

● ஹரிஜனங்களுக்கென்றே ஒரு நாளை ஒதுக்கியதானது அவர்கள் முன்னேற்றத்திலும் தீண்டாமை ஒழிப்பிலும் பெரியவரின் ஆழ்ந்த ஈடுபாட்டினைப் புலப்படுத்தியது. குமரி மாவட்டத்தைச் சேர்ந்த ஹரிஜன வாலிபர் வர்மக் கலை பற்றிப் பேசினார். கராத்தே, குங்ஃபூவுக்கு இணையான தற்காப்புக் கலை இது!

● பல அமைச்சர்கள் பங்கேற்ற இவ்விழாவில் வாலியின் தலைமையில் நடந்த கவியரங்கத்துக்கு முதல்வா வந்திருந்தார். பேச அழைக்கப்பட்டும் ''கவிதைகளைக் கேட்கத்தான் வந்தேன்'' என்றவர் மாலை வருவதாகக் கூறி விடைபெற்றார். மாலையில் வந்தபோது உடன் வந்தவர் டாக்டர் கரன்சிங். முதுகெலும்பில் சிகிச்சை பெற்று வந்தாலும் கம்பீரமாக நடந்து வந்தார் காஷ்மீர ராஜா.

● அறநிலையப் பாதுகாப்புத் துறை தம்மிடம் இருந்தபோது கோவிலுக்குப் போனால் சுவாமியையும் மறந்து எல்லோரும் தம்மையே பார்த்தது பிடிக்கவில்லை என்றும்

✕ நேபாள ராஜகுரு






இசைக் கருவிகள்

✠ தமிழக முதல்வருடன் டாக்டர் கரண்சிங்

அதனால் ஆர். எம். வீ.யிடம் ஒப்படைத்த தாகவும் கூறினர் எம். ஜி. ஆர். அத்துடன் விட்டிருக்கலாம். ''அத்துறை சரியாக நிர் வகிக்கப்படவில்லை என்று தெரிந்தால் நானே திரும்ப எடுத்துக் கொள்வேன்'' என்று கூறப் போக அதற்கு ஏகப்பட்ட உள்ளர்த்தங்கள் கற்பிக்கப்பட்டு விட்டன.

● ''இந்து மதத்தின் பல்வேறு பிரிவினரும் வேற்றுமைகளை மறந்து, ஒற்றுமை கண்டால் மற்றவர்களைப் பற்றிப் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. பயப்படுகிறோம் என்றால் நாம் சரியாக இல்லை என்று தான் பொருள்'' என்ற முதல்வரின் கருத்து முதல்தரமானது.

● காஞ்சிப் பெரியவரோ இந்த விழாவை இந்து சமய விழாவாக அன்றி இந்திய சமய விழாவாகவே நடத்திக் காட்டி விட்டார். அதற்கேற்பப் பெயர் மாற்றமும் ஏற்பட்டது. ஆக, இந்து சமய ஒற்றுமை, இந்திய சமயங்களின் ஒற்றுமை, பாரத ஒருமைப்பாடு ஆகிய அனைத்துக்கும் ஊக்கம் அளிக்கும் விழாவாக விளங்கியது.

● ''இந்து மதத்தின் கதவுகள் எப்போதும் திறந்திருக்கும். இதிலிருந்து ஒருவர் வெளியில் போகவும் தடையில்லை; திரும்பி வரவும் யோசிக்கவேண்டாம்; கதவைத் தட்டாமலே வரலாம்!'' என்று பெரியவர் சொன்ன போது கைதட்டல் பலமாக இருந்தது.

● பரமாசாரியாளின் 90வது ஜயந்தியை யொட்டிப் பல ஏழைகளுக்குச் சுய வேலை வாய்ப்பு அடிப்படையில் தொழில் தொடங்கச் சாதனங்களை வழங்கினர் பெரியவர். பத்து வங்கிகள் சிறு தொகைகளைக் கடனாகக் கொடுத்து உதவின.

● கண்காட்சியில் பிரபல ஓவியர்கள் தீட்டிய வண்ணச் சித்திரங்கள் தவிர கவனத்தைக் கவர்ந்தவை: பழக் கோலம்; புராதன இசைக் கருவிகள்; கோயில் நிர்மாண வரைபடங்கள்.

● கலைவிழாவில் காணப்பட்ட திரை உலக புள்ளிகள் ரஜினி, இளையராஜா. பூனையாக அடக்கத்துடன் கலை விழாவைத் தொடங்கி வைத்தார் ''பாயும் புலி''. ஆரம்ப நாளிலும் இறுதி தினத்திலும் இறைவணக்கம் தாமே இயற்றிப் பாடினர் ''இளையராஜா''.

கட்டுரை, படங்கள்: ரிக்கி



✠ ஊர்வலம்

# கேஸியூபியுடன் உங்கள் நேரமே



## சேமிப்பு நேரம்

காலம் பொன்னானது. காலத்தில் கைகொடுக்கும் திட்டங்கள் பல கேஸியூபி அளிக்கிறது. உங்கள் சேமிப்பு விரைவாக வளர்வதுடன் உங்கள் தேவையான நேரத்திற்கு உதவுகிறது.

இப்போது கேஸியூபி உங்கள் சேமிப்பிற்கு 11 சதவீத வட்டி அளிக்கிறது.

எங்கள் திட்டம் ஒன்றைத் தேர்ந் தெடுத்து சேமியுங்கள். உங்களது சேமிப்பு சரியான நேரத்திற்கு கை கொடுப்பதை அறிவீர்கள்.

**கேஸியூபியில் உங்கள் நேரம்**
**சேமிப்பு நேரம்**




## கும்பகோணம் ஸிடி யூனியன் பாங்க் லிட்

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001

**பாதுகாப்பிற்கும் வளர்ச்சிக்கும்**

APRC

---

*தஞ்சை மாவட்ட எண்கண் ஸ்ரீ வேலவன் நித்திய பூஜை அறக் கட்டளைக்கு பொது மக்கள் தங்கள் நன்கொடைகளை எவ்வித செலவுமின்றி எங்கள் வங்கியின் எல்லா கிளைகளின் மூலமும் அனுப்பலாம்.*


முதல்வர்கள் கூட்டம்
டில்லியில் நடைபெற்றது.


கர்நாடகா
ஆந்திரா


ரத்தத்தின் ரத்தமே நீ போ! சிவாஜி நீ நில்லு!
STOP
மத்திய அரசே அநியாயம் செய்யாதே! அரிசி கொடு
செயலாகாத தமிழக அரசே! மத்திய அரசு மீது பழி போடாதே!

# கல்கி



1983 ஏப்ரல் 17
ருத்ரோத்காரி சித்திரை 4
மலர் : 41 இதழ் : 38




# அன்பார்ந்த நேயர்களுக்கு . . .

வணக்கம். புத்தாண்டு வாழ்த்துக்கள்!

சென்ற துந்துபி வருஷம் நமக்கு அவ்வளவாக மகிழ்ச்சி தரவில்லை. துந்துபி என்பதற்குத் 'துளி மழை' என்று அர்த்தம் போட்டிருக்கிறது பேரகராதியில்! அந்தத் துளி மழை கூடப் பெய்யாமல் ஏமாற்றி விட்டது! தண்ணீர் கஷ்டம்தவிர வீட்டிலும் நாட்டிலும் எத்தனையோ பல பிரச்னைகள். துந்துபி என்பதற்குப் 'பேரிகை' என்றும் ஒரு பொருள். வரப் போகிற சுபிட்சத்தைக் கடந்த ஆண்டு பேரிகை முழக்கி அறிவித்ததாகக் கொள்ளலாம் எனில் ருத்ரோத்காரி ஆண்டு சுபமானதாகத் தான் இருக்க வேண்டும். இதற்கேற்ப இவ்வாண்டுக்குப் பலன் எழுதுகையில் பஞ்சாங்கம், ''நல்ல மழை பெய்யும், நீர் நிலைகள் நிரம்பும்; விளைச்சல் அமோகமாய் இருக்கும்''என்றெல்லாம் கூறுகிறது. ஆனால் விலைவாசியைப் பொறுத்தமட்டில் எச்சரிக்கையாக, ''ஏறு முகம்'' என்கிறது! அரசின் பொருளாதார கொள்கைகளைக் கவனித்து வரும் நமக்கோ இதில் சந்தேகம் ஏற்படக் காரணமே இல்லை! விலைவாசிகள் ஏறினாலும் அதனை, பொதுவில் கொழிக்கும் வளம் வென்று விடட்டும் புதிய ஆண்டில்! கல்கி நேயர்களின் இல்லங்களிலெல்லாம் சர்வ மங்களங்களும் பெருகட்டும்!

எமது இந்த வாழ்த்து பலிப்பதற்கு ஒரு முன்னுதாரணமாகவே திகழ்கிறது இந்தப் புத்தாண்டுச் சிறப்பிதழ். பரமாச்சார்யாளின் அன்பிலே பழுத்து இன்று நம்மை அன்பிலே திளைக்கச் செய்கிற ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், ''முடிவில்லா அன்பு'' பற்றி எழுதுகிறார். தொடர்ந்து பல விஷயங்கள் பற்றி எழுதிவரவும் அன்புடன் இசைந்துள்ளார். ''தெய்வ தரிசனம்'' என்ற பொதுத் தலைப்பில் ஒவ்வொரு வாரமும் ஒரு திருத்தலம் பற்றி ஆனந்தி எழுதுகிறார். இந்த இதழில் திருவாரூரானின் அஜபா நடனத்தைப் பற்றிப் படிக்கும்போதே நம் மனம் ஆனந்தக் களியாட்டம் போடுகிறது.

வைரமுத்து, தமக்கென ஒதுக்கப்பட்ட பக்கத்தில் ''மரபுக்கவிதையை மடிய விடமாட்டோம்'' என்று சூளுரைக்கிறார். பாரதி வரிகளைத் தலைப்பாக்கிக் கொண்ட சவிதாவோ தம் தொடர் கதையின் தொடக்கத்திலேயே இளம் உள்ளங்களைப் பரவசத்தில் ஆழ்த்துகிறார்.

இன்று பாரத நாட்டின் கவனத்தையெல்லாம் ஒரு தனி மனிதர் ஈர்க்கிறார் எனில் அவர் என். டி. ராமராவ் என்பதில் ஐயமில்லை. புது தில்லியில் முதல்வர்கள் மாநாட்டில் கலந்து கொண்டு திரும்பிய அவர், ''எல்லாரும் வந்தார்கள், நமஸ்தே சொன்னார்கள், தயாரித்து வந்த சொற்பொழிவைப் படித்தார்கள், திரும்பிப் போனார்கள்! இதுபோன்ற மாநாடுகளால் ஒரு பலனும் விளையாது''என்றார். என்.டி. ஆரைத் தவிர வேறு யாருக்கு இப்படி உண்மை பேசத்தைரியம் வரும் என்று நாம் வியந்து போகிறோம். அவருடைய ரசமான வாழ்க்கை வரலாறு இந்த இதழுடன் இலவச இணைப்பானாலும் பெருமதிப்புடைய பொக்கிஷமாகத் திகழ்கிறது.

இவ்வளவு செய்தும் போதவில்லை எங்களுக்கு! இன்னும் சிறப்பாக உங்களுக்கு எப்படிப் பணியாற்ற முடியும் என்றே சதா சிந்திக்கிறோம். உங்களையும் கலந்தாலோசிக்கத் தீர்மானித்தோம். இதற்கென ஒதுக்கப்பட்ட பக்கத்தைப் பூர்த்தி செய்து அனுப்பினால் நீங்கள் பரிசு பெறவும் வாய்ப்பிருக்கிறது! உபசாரத்துக்காக அன்றி உண்மையை எழுதி அனுப்பக் கோருகிறோம்.

கடைசியாக ஒரு வார்த்தை. உங்களுக்கு இந்த இதழ் பிடித்திருந்தால் — பிடித்திருந்தால் மட்டுமே — இதுவரை கல்கி வாங்காத ஒரு நண்பரைக் கல்கி வாங்கிப் படிக்கும் வாசகராக்குவதெனப் பிரதிக்ஞை செய்து கொள்ளுங்கள். அதுவே நீங்கள் கல்கிக்குத் தெரிவிக்கும் புத்தாண்டு வாழ்த்தாக விளங்கட்டும்!

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# தியாகேசன் திருநடனம்

ஆனந்தி

இறைவனை அரசனாகக் கருதி ராஜோபசாரம் செய்து வழிபடும் முறை மிகப் புராதனமானது.

கோ + இல் என்ற சொல் அரண்மனை என்றே பொருள் படுவதால் இறைவனைத் தங்கள் இதய சாம்ராஜ்யத்தில் வீற்றிருந்து செங்கோலோச்சும் மன்னனாகவே தமிழ் மக்கள் கருதி வழிபட்டனர் என்பது நிச்சயமாகிறது.

அதிலும் தியாக**ராஜர்** குடிகொண்டுள்ள திருவாரூர், நட**ராஜர்**குடி கொண்டுள்ள தில்லை இரண்டு ஊர்களிலும் கோ**யி**ல் என்றே குறிப்பிடுவது வழக்கம். தில்லையில் கோவிந்த **ராஜரும்** இருக்கிறார் அல்லவா? மற்ற ஊர்களில் கோ**வி**ல்.

ஆராய்ச்சி மணி கட்டி ஒரு பசுவுக்கு நீதி வழங்கத் தன் மகனையே தண்டித்த மனுநீதிச் சோழன் அரசாண்ட ஊர் திருவாரூர்.

இராஜ ராஜ சோழ மன்னரின் பாட்டியாரான செம்பியன் மாதேவியார் இந்தக் கோவிலுக்குள்ளேயே அறநெறிநாதர் கோயிலைக் கட்டியிருக்கிறார். இந்தச் சிறு கோயிலை முன்மாதிரியாகக் கொண்டே தஞ்சை பெருவுடையார் கோவில் கட்டப்பட்டது என்று கூறுகிறார்கள்.

முதலாம் இராஜேந்திர சோழனால் கற்றளியாகக் கட்டப்பட்ட கோயில் ஆரூர் கோயில். அவனது உள்ளம் கவர்ந்த ஆடலரசி நக்கன் பரவை என்பவர் கணக்கற்ற ஆபரணங்களும், விளக்குகளும், நிலங்களும், அளித்துத் திருப்பணிகள் செய்திருக்கிறார்.

சுந்தரரும், ஞானசம்பந்தரும் வாகீசர் பெருமானும் தமிழால் பூஜித்த தலம் இது.

சித்தந் தெளிவீர்காள்
  அத்தன் ஆரூரைப்
பத்தி மலர் தூவ
  முத்தி யாகுமே!

என்று தித்திக்கும் செந்தமிழால் பாடிவிட்டார் சம்பந்தர் பெருமான்.

இசையுலகச் செம்மல்களான சியாமா சாஸ்திரிகளும் தீக்ஷிதரும் தியாகராஜ ஸ்வாமியும் அவதரித்த தலம் இது.

கோவிலின் பரப்பளவும் மிகப் பெரியது. கோவில் ஐந்து வேலி, குளம் ஐந்து வேலி, இறைவனுக்கு உகந்த செங்கழுநீர்ப்பூ ஓடை ஐந்து வேலி என்று புகழ் பெற்றது. (ஓடை இருக்குமிடம் சுருங்கி விட்டது) கோவிலுக்குள் எத்தனை கோவில்கள், எத்தனை லிங்கத் திருமேனிகள், எத்தனை மகான்கள் பூஜித்த தலம்! ஒவ்வொரு கல்லும் கதை சொல்லும்.

இலக்கியங்களுக்கும் குறைவில்லை. தியாகராஜ லீலை, திருவாரூர் உலா, தியாகேசர் குறவஞ்சி, கமலாலயச் சிறப்பு முதலிய செந்தமிழ் நூல்களுடன் பல வடமொழி நூல்களும் இயற்றப்பட்டுள்ளன.

திருவாரூர் செல்லும் வாய்ப்புக் கிட்டிய யாருமே பாக்கியசாலிதான். வீதிவிடங்கர் சுந்தரருக்காகத் தூது சென்றபோது நடந்தே சென்றாராம். அந்த வீதியில் நாமும் நடக்கலாம் அல்லவா? சுந்தரர் பெருமானும், சேரமான் பெருமான் நாயனாரும் எப்போதும் தரிசனம் செய்து கொண்டிருக்கின்ற தியாகராஜப் பெருமானைக் காணலாம் அல்லவா? முத்துஸ்வாமி தீக்ஷிதர் தமது

✕ திருவாரூர் கமலாலயம்



வீணையும் கையுமாக அமர்ந்து, கமலாம்பாள் சந்நிதியில் நவாவரணம் பாடியிருப்பாரே? அந்த இடத்தை நமஸ்கரிக்கலாமே? கணக்கற்ற சிவன் கோவில் திருப்பணிகள் செய்த செம்பியன் மாதேவியார் பிரதக்ஷிணம்செய்த பிராகாரத்தில் நாமும் வலம் வந்து துதிக்கலாம். பஞ்சமுக வாத்திய ஒலியையும், பாரி நாயனத்தின் இன்னிசையையும் கேட்டு இன்புறலாம். திரு ஆரூர்க் கோயிலைச் சுற்றி ஏழு கோபுரங்கள் அழகு பொலிய நிற்கின்றன. அறநெறி நாதர் கோவிலுக்குப் பின்னால் ஓர் இடத்திலிருந்து பார்த்தால் ஏழு கோபுரங்களையும் காணலாம்.

தியாகராஜப் பெருமானுடைய வசந்தோத்ஸவமும் பங்குனி உத்தரப் பெருவிழாவும் பிரசித்தமானது. அந்தச் சமயத்தில் தியாகேசர் தம் அரண்மனையிலிருந்துவெளியே வந்து தேரில் ஏறித் தம்முடைய பிரஜைகளுக்குக் காட்சி தந்து ஆட்சி புரிகிறார். தேர் ஓடாவிட்டாலும் கூட சுவாமி முதல் பிராகாரத்தில் உள்ள 'தேவ ஆச்ரய' மண்டபத்துக்கு எழுந்தருளி அலங்கார பூஜித




⌘ திருவாரூர் கோவில் தியாகராஜர் பிரகாரம்

ராய்க் காட்சி தருவார். இந்த விழாவின் முடிவில் பதஞ்சலி வியாக்ர பாத முனிவர்களுக்குப் பாத தரிசனம் தருவார். இந்தப் பாத தரிசனம் வருடத்தில் இரண்டு நடவைகள்தான் கிடைக்கும்.

அசைந்தாடி அகிலமும் ஆட்டும் தியாக ராஜப் பெருமானின் அஜபா நடனத்தைக் காணக் கோடிக் கண்கள் வேண்டும்.

தில்லையில் நடராஜர் நின்று ஆடுகிறார். பற்பல நாட்டிய நிலைகளில் அவரைப் பார்க்கிறோம். ஸோமாஸ்கந்தரான தியாகரோ அமர்ந்த நிலையிலேயே அம்பிகையுடன்சேர்ந்து ஆடுகிறார்!

அஜபா நடனம் என்ற பெயர் வந்ததற்குக் காரணம் தெரிய வேண்டுமானால் தலபுராணத்தைப் பார்க்க வேண்டும். மகா விஷ்ணு ஒரு புத்திரன் வேண்டும் என்று சிவபெருமானை நினைத்துத் தவம் செய்தார். சிவ பெருமான் அம்பிகையுடன் காட்சி தந்தார். அம்பிகையை வணங்காமல் விஷ்ணு வரம் கேட்டபடியால் ஈசுவரன் புத்ர பாக்கியத்தை அளித்தும் தேவி கோபம் கொண்டு அவன் அழிந்து போவான் என்று சபித்து விட்டார். மகாவிஷ்ணு மிகவும் வருந்தி ஈசுவரனையும் அம்பிகையையும் கந்தனுடன் ஸோமாஸ்கந்தராக எழுந்தருளப் பண்ணி பூஜித்தார். அம்பிகையும் "உன் பிள்ளை எரிந்து போனாலும் எழுந்து விடுவான்" என்று வரம் கொடுத்தார்.

"நீங்கள் இதே கோலத்தில் என்றும் இருந்து உலகுக்கு அருள் புரியவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார் நாராயணன். இருவரும் இணங்கினார்கள்.

ஸ்ரீமந் நாராயணன் அந்த மூர்த்தியைத் தன் நெஞ்சத்தில் வைத்துக் கொண்டு இடைவிடாது பூஜித்து வந்தார். ஜபம் என்றால் நாவினால் நாமத்தை உச்சரித்தல். அஜபம் என்றால் நாவினால் நவிலாமல் நினைவினாலேயே மௌனமாகத்தவத்தில்ஆழ்ந்துவிடுதல். திருப்பாற் கடலில் பள்ளி கொண்டுள்ள நாராயண மூர்த்தி தமது இதய கமலத்தில் ஸோமாஸ்கந்தரை வைத்து மௌன வழிபாடு செய்தபடியால் அது அஜபமாயிற்று. இப்படி வழிபாடு செய்யும்போது பாற்கடலில் ஏற்பட்ட அலைகளின் அசைவினால் சேஷ சயனர் அசைந்தாட ஸோமாஸ்கந்தரும் வலது புறமும் இடது புறமும் அசைந்து அசைந்து ஆடினார். மூச்சு விடும்போது மார்பு உயர்ந்து தணியுமல்லவா? விஷ்ணு மூச்சு விடும்போது ஈசனும் உயர்ந்தும், தணிந்தும் ஆடினார். மூச்சை உள்ளுக்கிழுத்து வெளியே விடும்போது முன்னும் பின்னுமான சலனமும் ஏற்பட்டது. இந்த மூன்று விதமான அசைவுகளும் அஜபா நடனம் ஆயிற்று.

சுவாமி புறப்பாட்டின்போது இன்றும் அஜபா நடனம் செய்வது வழக்கமாக இருக்கிறது.

நடை பாவாடை விரித்து ஸ்வாமியைச் சிம்மாசனத்துடன் தூக்கிக் கொண்டு வந்து இரு பருத்த மூங்கில்களுக்கு இடையே பிணைக்கப்பட்ட ஒரு பீடத்தின் மீது வைக்கிறார்கள். மூங்கில்களுக்கு மத்தியில் பிள்ளைத் தண்டு என்று வழங்கப்படும் இரு வெள்ளித் தண்டுகள் இரகசியமாகப் பிணைக்கப்படுகின்றன. இதில்தான் அஜபா நடன ரகசியமே அடங்கி யிருக்கிறதாம்.

குறித்த லக்னத்தில் சுவாமியைப் பக்தர்கள் தூக்குகிறார்கள். சந்தனம் பூசிய தோள்களில் வைத்துக் கொண்டு ஆடத் தொடங்குகிறார்கள். சுவாமியைச் சுமப்பதற்கென்றே வெளியூர்களில் வேலையாக இருக்கும் சிலர் லீவு போட்டுவிட்டு வருவார்கள் என்று கேள்விப்பட்டு மன நெகிழ்ச்சி அடைகிறோம்.

"தியாகராஜா! தியாகராஜா!" என்ற கோஷம், சுவாமியை மேலே தூக்கிப் போடுகிறார்கள். தோளில் தாங்குகிறார்கள். மேல் விதானத்தில் இடித்து விடுமோ என்று கவலையாக இருக்கிறது. சுத்த மத்தளத்தின் சப்தம், பஞ்ச வாத்திய முழக்கம், பக்தர்களின் ஆரவாரம் எல்லாமாகச் சேர்ந்து நமது உள்ளத்தில் ஊடுருவிச் சிலிர்க்கச் செய்கிறது. அத்தனை கனத்தை எவ்வாறு தாங்குகிறார்கள் என்று வியக்கும்போதே முன்னும் பின்னும் இருபுறமும் அசைந்தாடுகிறார் சுவாமி, மாறுத புன்னகையுடன்.

முக மண்டபத்திலிருந்து வெளியே வருகிறார் சுவாமி. மின்சாரம் தடைப்பட்டது நல்லதாயிற்று. பெட்ரோமாக்ஸ் விளக்கொளி



யில், லொட்டிப் பிழம்பின் ஒளியின் அம்மையும் அப்பரும் ஜொலிக்கிறார்கள். என்ன அழகு! என்ன அலங்காரம்! முத்துப் போன்ற முல்லைப்பூக்கள், பசுமை நிறமான மரு, பொன்னிறமான செவ்வந்திப் பூ. மணம் கமழும் வெட்டிவேர் இவற்றால் தொடுத்த மாலே. இரத்தின கிரீடம் உமையம்மையின் முடியில் ஒளியைச் சிந்துகிறது. எங்கும் காண முடியாத ஒரு விசித்திரமான பொன் ஆபரணத்தை தியாகராஜ சுவாமி அணிந்து கொண்டிருக்கிறார். பிரும்ம கபாலங்களால் கோக்கப்பட்ட நீண்ட மாலை இது. ஈசன் புறப்படுவதற்கு முன்பே அவருடைய வீர கண்டயம் (வீர வாள்) தெருக்குச் சென்று விடுகிறது.

''முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்''

என்ற சுந்தரரின் வாக்கு நினைவுக்கு வரு கிறது.

''சாட்டி நிற்கும் அண்டமெலாம்
சாட்டையில்லாப் பம்பரம் போல்
ஆட்டிவைக்கும்''

பெருமானை இவர்கள் தூக்கிக் கொண்டு ஆடுகிறார்கள். அலங்கரித்து மகிழ்கிறார்கள். இந்தப் பாக்கியத்தைக் கருதி யல்லவா, கோவிலில் இறைவனுக்குக் கைங்கரியம் செய்து வருபவர்கள் எவ்வளவு குறைந்த ஊதியமாக இருந்தாலும் தொடர்ந்து கோவி லில் பணி செய்து வருகிறார்கள். இவர்கள் நிலை எப்போது உயரப் போகிறது! என்ற எண்ணம் தோன்றுகிறது. தெய்வீக நினைவு களுடே லௌகிக நினைவுகள் வராமலிருக் கிறதா என்ன?

யோக நித்திரையில் ஆழ்ந்து சிவத் தியானத்தில் மனத்தை இருத்தியிருக்கும் விஷ்ணுவின் சுவாசம் வெறும் மூச்சாக இருக்க முடியுமா? அது குண்டலினி சக்தி யின் எல்லையாகத்தானே இருக்கும்! ஆகவே இந்த அஜபா நடனமானது மூலாதாரச் சக்கரத்திலிருந்து எழும்பி இடகலை பிங்கலை நாடிகளின் வழியோடி ஸஹஸ்ராகாரச் சக்கரத்தில் முழுமை பெறும் குண்டலினி எழுச்சியின் புறத் தோற்றமாகக் கருத இடமுண்டு என்று திருவாரூர் நகரில் வசிக் கின்ற தமிழ்ச்செல்வரான திரு இரத்தின தேசிகர் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

மகாலட்சுமி மாங்கல்ய பலத்துக்காகத் தவமிருந்த க்ஷேத்திரம். தவத்தைக் கலைக் காமல் பலகணி வழியாகத் தரிசனம் செய் கிறோம். வன்மீக நாதரும் ஸோமகுலாம் பாளும் மகா விஷ்ணுவின் கர்வத்தை அடக்கித் தேவர்களைக் காத்த தலம். அத னால் பெண்களுக்கு மிகவும் சிறப்பான தலம். வன்மீகநாதர் முக மண்டபத்தில் அம்பாள் கை ஊன்றி அமர்ந்திருக்கும் அழகே அழகு.

கருணைக் கடலான அல்லியங்கோதை அருள் பாலிக்கிறாள். வடமொழிப் பெயர் நீலோத்பலாம்பாள். பெயரைச் சொல்லும் போதே நா இனிக்கிறது. இன்னும் பர்வ தேவர்களின் தேவிகளின் படிமங்கள். நீலோத்பலாம்பாள் ஸந்நிதியிலுள்ள பாவை விளக்கு நாச்சியார்களைப்பார்த்துக்கொண்டே இருக்கலாம்.

ஒவ்வொரு நாளும் தியாகராஜஸ்வாமிக்கு மாலை நேரத்தில் செய்யப்படும் பூஜையான திருவந்திக் காப்பு மிகவும் விசேஷமானது. எல்லாத் தலங்களிலுமுள்ள சிவகலைகளும், தியாகராஜாவின் மூலம் அருளைப் பொழிவ தாக ஐதீகம்.

தியாகராஜாவின் கருவறையில் உள்ள மரகத லிங்கம் உளியால் செதுக்கப்படாத லிங்கமாகையால் விடங்கர் என்ற பெயர் பெற்றது.

இந்த லிங்கத்தை முசுகுந்த சக்கரவர்த்தி தேவேந்திரனிடமிருந்து பெற்றுத் திரு ஆரூர் தலத்தில் கொண்டு வந்து வைத்துப் பூஜை செய்தார், இன்றும் முசுகுந்தார்ச்சனை நடத்தி வைக்கப் படுகிறது.

ஆரூரின் சிறப்புக்களில் மிக உன்னத மானது இந்த ஊரில் யம பயம் கிடையாது என்பதுதான். தியாகேசனைப் பணிந்தவர்கள் அனைவரும் சிவகணமாகி விடுகிறார்கள். எம னுக்கு வேலை யில்லாமல் போகவே ''நீ எம் சண்டேச்வரனாக இருந்து எம் அடியாரைக் காப்பாயாக'' என்று எமனுக்குக் காத்தல் தொழிலைக் கொடுத்து விட்டார்.

கோயிலுக்குச் சென்று திரும்பி வரும் போது எம சண்டேச்வரரிடம் சொல்லிவிட்டு வரவேண்டும். சிவகணமாக்கி ஸாலோக் யாதி பதவியை அருளிவிடுவார்.

கோவிலிலிருந்து வெளியே வரும்போது.

''சித்தத்தைச் சிவன்பாலே
வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள்
எல்லார்க்கும் அடியேன்''

என்று மனம் குறிஞ்சிப் பண்ணில் பாடு கிறது. தியாகேசன் திருநடனம் கண்டு களித்த மன நிறைவுடன் சிவ கணமாகத் தகுதி பெற்று விட்டோம் என்ற பெரு மிதத்துடன் ஊம்பி ஸ்டேஷனுக்கு வந்து காத்திருக்கிறோம்.

நாகூரிலிருந்து செங்கோட்டை பாஸஞ்சர் வருகிறது. ஆனால் பிளாட்பாரத்தில் நிற் காமல் நேராகப் போகிறது. கொஞ்ச தூரம் சென்ற பிறகு லயன் மாறித் திரும்ப வும் பின்னாலேயே வந்து பிளாட்பாரத்தில் நிற்கிறது. அடடா! திருவாரூர் க்ஷேத்திரத் தில் ரயில்கூட அஜபா நடனம் செய்கிறதே என்று மகிழ்ந்து கொண்டே ரயில் ஏறு கிறோம். ரயில் ஓடத்தொடங்குகிறது. பக்க வாட்டில் அசைந்து ஆடவும் செய்கிறது. திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரந் தாமனின் இதய கமலத்தில் வீற்றிருக்கும் தியாகேசரைப் போலவே நாமும் ஆடிக் கொண்டே துயிலில் ஆழ்கிறோம்!

**புகைப்படங்கள்: சரஸ்வதி சத்தியமூர்த்தி**
**மேலட்டை வண்ணப் படங்கள்:**
**சரஸ்வதி சத்தியமூர்த்தி, நடேசன் வசந்தி**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப்



# போட்டி '83

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறு கதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000** |
| **இரண்டாவது பரிசு** | **ரூ. 500** |
| **மூன்றும் பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 250 வீதம்)** | **ரூ. 500** |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

* கதைகளை அனுப்பக் கடைசி தேதி ஜூன் 15.

* உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.



**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032**

விமல்

ஃபன்டைம் ஷர்ட்

ஆனந்தமான நேரங்களுக்கு
அற்புதமான, கண்ணைக் கவரும் வண்ண டிசைன்களில்
விமல் ஷர்ட்டிங்ஸ். பிரின்டட்ஸ், ப்ளெய்ன்ஸ், பேனல்ஸ்,
கட்டங்கள், கோடுகள் — 1600க்கு மேல். குதூகலியுங்கள்.




ஷர்ட்டிங்ஸ்

### பாய்ந்து வந்த பாதை....

● கருத்தடைச் சாதனங்கள் தயாரிக்கும் ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் விஸ்வநாதன், கற்பனை வளம் மிக்கவன். சினிமா இயக்குனராகவும், கவிஞனாகவும் அடிக்கடி மனத்தளவில் மாறிச்சஞ்சரிப்பான். தொழிலகத்துக்கு லேடக்ஸ் ரப்பர் சுமந்து வர வேண்டிய லாரி குறித்த நாளில் வராததால் அதைத் தேடி காரில் புறப்பட்டும் விசுவநாதனுக்கு வழியில் ஒரு கிராமத்தில் வசந்தாவிடம் அறிமுகம் ஏற்படுகிறது. சாலை ஓரம் நின்று கவனத்தை ஈர்த்துப் பிழைப்பவள் என்றாலும் அவளுடைய வெள்ளை உள்ளம் அவனைக் கவர்கிறது.

உபாத்தியாயராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற நாணு சார், வளர்ந்து கல்யாணத்துக்கு நிற்கும் தமது பெண்களைக் காப்பாற்ற வேண்டிய கடமை காரணமாக, பழைய மாணவன் கே. ஆர். வடிவேல் விடுத்த அழைப்பை நம்பி வேலை ஏற்கச் சென்னை வருகிறார். ஆனால் வடிவேல் மது அருந்தி மயங்கிக் கிடக்கப் பக்கத்துக் கடையில் காத்தி லால் மேத்தாவுக்கு ஓர் ஆங்கிலக்கடிதம் எழுதிக் கொடுத்துஉதவப் போக அவன் மதிப்புக்கு உரியவராகிறார்.

இன்னொரு லாரிக் கம்பெனி சொந்தக்காரரான ராவுத்தர் தமது வண்டி ஒன்று வழியில் சாலையை விட்டு விலகிக் கிணற்றைத் தாக்கி அதனுள் கவிழ்ந்து கிடப்பதாகக் கேள்விப்பட்டுச் செல்கிறார். கிரேன் ஒன்று வாடகைக்கு எடுத்து வந்து அந்த லாரியை மீட்க அவர் எண்ணும்போது விசுவநாதன் அவரை அணுகித் தனது அவசரத்தை எடுத்துச் சொல்ல கிரேனை அவனுக்கு ராவுத்தர் கொடுத்து உதவுகிறார்.

விசுவநாதன் பழுதாகிப் போன லாரியிலிருந்து லேடக்ஸ் டிரம்மை வேறு லாரிக்கு கிரேன் உதவியால் மாற்றிக் கொண்டு சென்னை விரைகிறான். தொழிலகத்தில் எம். டி. போனில் பேசி அவனைப் பாராட்டுகிறார். அவன் மனைவி தாரிணியோ ஃபோனில் பேசி அவன் குடும்பத்தைக் கவனியாமல் ஆபீஸ் காரியமாகவே இருப்பதற்காகக் கோபிக்கிறாள். சோர்வுடன் நாற்காலியில் சரியும் விசுவநாதன் கவிதை நெய்யத் தொடங்குகிறான்.

### அத்தியாயம் 14

கே.ஆர். வடிவேலின் தகப்பன் ஒரு நல்ல விவசாயி. கால் கட்டை விரலால்



# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

இனறி அவரால் மண் வாகு சொல்ல முடியும். எண்ணி நாலே வெட்டில் மடை இருப்ப முடியும். நாற்றுப் பச்சையைப் பார்த்து விளைச்சல் சொல்ல முடியும். இரவும் பகலும் தூக்கமின்றி வளர்ந்த பயிரைக் களத்து மேட்டில் இருந்தபடி காவல் காக்க முடியும். அப்பா அசந்து உறங்கி வடிவேல் பார்த்ததே இல்லே. இடுப்பு வேஷ்டியை அவிழ்த்து மேல் துணியைப் போர்த்திக் குத்துக் காலிட்டு உட்கார்ந்திருப்பதே தூக்கம். எஸ்.எஸ்.எல்.சி. முடிக்கிறவரை வடிவேலுவை அவர் களத்து மேட்டுக்கு அழைக்கவில்லே. பேப்பரில் நம்பர் இல்லே யென்றதும், ''போவுது வுடு. பாஸ் பண்ணுத்தான் சேறு மிதிக்க முடியுமா என்ன... எவனும் செய்யலாம். இங்க வா. ஏர்க்காலேத் தொட்டுக் கண்ணில் ஒத்திக்க. நான் இறங்கி ஓட்டறேன். பின்னுலேயே தடம் பாத்து வா.''

''யப்பா, செருப்புப் போட்டிருக்கேனே. எப்படி சேறுல வர்றது'' வரப்பில் நின்றபடி இடுப்பில் கை வைத்தபடி வடிவேலு கேட்டான்.

''அவுத்துட்டு வாடா.''

''செருப்பில்லாத கஷ்டம்ப்பா எனக்கு!''

''ஏன்டா கர்ணன் கவச குண்டலத்தோட பொறந்தாப்பல உங்கம்மா வவுத்துலேர்ந்து செருப்புக் காலோடா பொறந்த? கூட வாடா இறங்கி.''

''ஃபயர் இன்ஜின்காரன் முழங்கால் மட்டும் ஒரு ரப்பர்ஷூ போட்டிருப்பானே அதை போலவாங்கி மாட்டிக்கிட்டா களுவுஇல்லை?''

வேஷ்டியை அவிழ்த்து வடிவேலின் தகப்பன் தலேப் பாகையாய்க் கட்டிக் கொண்டார். வரப்பில் நின்றபடி பிள்ளையை மல்லாக்கச் சேறில் தள்ளி விட்டார்.

''எப்பே.....'' என்று பயக் கூச்சலுடன் கைகளே விரித்துச் சேற்றில் விழுந்த வடிவேலுக்கருகில் நின்ருர். ''இப்ப தொப்புள் வரை நனேஞ்சிருச்சில்ல. இனி செருப்பு என்னத்துக்கு அவுத்துப் போடு.''

வடிவேலு உடம்பெல்லாம் குழம்பின சேறும் மனசெல்லாம் விவசாயம் பற்றிய வெறுப்பும் ஒட்டிக் கொண்டன. வடிவேலு பரீட்சையில் தோற்றதால் அவன் தகப்பன் சேற்றில் போட்டுப் புரட்டியதாய் ஒரு பையன் புரளி இளப்ப மன்னுர்குடியில் நிறையப்பேர் துக்கம் விசாரித்தார்கள்.

''பயப்படாம செப்டம்பர் பரீட்சை எழுதிடு. நவம்பர் டிசம்பர்ல ரிசல்ட் வரும். உங்கப்பா தள்ளிணுலும் காஞ்ச வரப்பிலேதான் தள்ள முடியும். சேறு இருக்காது. என்ன சொல்றே''

இந்தத் தஞ்சை மண் இன்டலே இன்னும் துக்கப்படுத்திற்று. செப்டம்பர் எழுதிஞன். தோற்றுப் போனுன். யாரும் துரத்தாமல் வீட்டை விட்டுச் சென்னேக்கு ஓடிப் போனுன்.

''போவுது களுதை. ஐயருபசங்க சகவாசம். நாக்காலில உக்காந்து சம்பாதிக்க ஆசை வந்திருக்க. செய்



யட்டும். வாணுங்கலே. அதுக்காகச் சேத்துல செருப்புப் போட்டா நடக்க முடியும்? உக்காந்து உக்காந்து புண்ணுக்கன்னு ஆசன வாயில மண்ணு சேருதான் கொழப்பிப் பூச வாங்கன்னு சொல்லு.''

இந்தச் செய்தியும் எட்டிற்று. ரோசம் ஊட்டிற்று.

''சேர்ல உக்காந்து சம்பாதிக்கத்தான் போறேன். சம்பாதிச்ச முதல் துட்டுல அந்தக் கிழவனுக்குப் புதுசா ஒரு ஜோடி செருப்பு அனுப்பத்தான் போறேன். பார்த்துடலாம். நானு கிழவனு யார் ஜெயிக்கிறதுன்னு.''

வால்டாக்ஸ் ரோடில் ஒற்றைவாடைத் தியேட்டர் தாண்டி ஒரு ரோட்வேலில் வேலை கிடைத்தது. நாற்காலி வேலை. ஜி. ஸி. நோட் எழுதும் வேலை. சரக்கு எஸ்ஸி குட்ஸ் கன்ஸைன்மென்ட் நோட் அதாவது லாரி ரசீது எழுதும் வேலை கிடைத்தது. லாரியில் ஏறி நாலு ஊருக்குப் போகும் வாய்ப்புக் கிடைத்தது. வட சென்னை நாயுடு பையன்கள் ஸ்நேகம் கிடைக்கத் தெலுங்கு தெரிந்தது. பெங்களூர் லோக்கு மாற்று ஆள் உதவிக்குப் போகக் கொஞ்சம் கன்னடம் ஹிந்தி கற்க முடிந்தது. எடை மிஷின் சூட்சமமும் செக் போஸ்ட் சிரமங்களும் தெளிவாயின. போக்குவரத்து போலீஸ் அறிமுகமாக நெருக்கடி நேரத்து பவ்யம் வந்தது. கூலி ஆட்களோடு மோத தடவடி முரட்டுத்தனம் தெரிந்தது. டிரைவர்கள் ஸ்நேகம் வர அரைப் பாட்டில் பிராந்திக்கு எந்த வித உதவியும் கிடைத்தது.

லாரி கம்பெனியில் ஏற்றிய பத்து டன் சரக்குப் போகக் கம்பெனிக்குத் தெரியாமல் சந்து பொந்தில் அடைத்து சாமான்கள் ஏற்றிப் போக ஆட்கள் பறப்பது தெரிந்தது.

வண்டி முழுக்க வாழைத் தாரும் அடியில் பாண்டிச்சேரி விஸ்கி பாட்டிலும், அரிசி மூட்டையோடு சிலோன் பாக்கு மூட்டை, டயர் லோடுக்கு நடுவே வெள்ளிப் பாளம், கடத்தல் பொருட்கள். திருட்டுச் சாமான், வரி கட்டாது போகும் விற்பனைகள்! இது ஏற்ற அலையும் புரோக்கர்கள் அறிமுகமாயிற்று. வண்டி டிரைவருக்குப் பாதி வடிவேலுக்குப் பாதி. எட்டு வருடத்தில் வடிவேலு கழுத்தில் தங்கச் செயினும் இடுப்பில் மல் வேட்டியும் டெரிலின் சட்டையும் புல்லட் மோட்டார் சைக்கிளுமாய் மாறிப் போனான்.

மன்னார்குடிக்கு முதல் முறையாக மோட்டார் சைக்கிளில் போனான். அப்பா வீட்டில் இல்லை. வயல் பக்கம் போனான். வண்டியை நிறுத்தி ஸ்டாண்ட் போட்டு அப்பனை நமஸ்கரித்தான். காற்று பலமாய் வீச நெகிழ்வு மண்ணில் நிறுத்தின வண்டி சாய்ந்து சேறு யிற்று.

''சந்தோசம்தான். அதுக்கு வண்டிய இங்க எடுத்து வரணுமா? வாணும். வண்டியைத் தொடைக்காதே. இந்த மண்ணுல விழுந்தது புரண்டது எதுவும் கெட்டுப் போனதிலே! ஒன்னையும் சேர்த்துத்தான் சொல்றேன். இது மண்ணுல்ல வடிவேலு. தங்கம். நல்லா இரு.'' தகப்பன் ஆசீர்வதித்தான்.

பட்டணத்தில் தன் ஜாதிப் பெண்ணையே மாலை மாற்றிக் கல்யாணம் செய்தான். வடிவேலு என்பதே தமிழ்ப் பெயராக இருப்பதால் ருசிகரமாய் வேறு பெயர் மாற்றிக் கொள்ள முடியவில்லை. பொன்னம்மாள் என்பதும் தமிழ்ப் பெயராகவே இருந்தது. பிள்ளை பிறந்து தலைவரிடம் போய் மதியழகன் என்று பெயர் வைத்தான். சென்னை கோட்டையைக் கட்சி கைப்பற்றிய நேரம் அன்பழகன் பிறந்தான். வடிவேலு பல கூட்டங்களில் பங்கேற்று வழிமொழிந்தான். நன்றி சொன்னான். எடைக்கு எடை ஏற்பாடு செய்தான். இவையனைத்தும் வாழ்க்கைக்கு உதவிற்று. இரட்டைக் கரை வேட்டிக்கு ஒரு பயம் மரியாதை இருந்தது. இவனால் உதவி செய்ய முடிந்தது. உதவிக்கு உதவி பெற முடிந்தது. சுமை தூக்கும் தொழிலாளர் சங்கமும், ஓட்டுநர் உதவியாளர் சங்கமும் திறக்கப்பட்டன. வால்டாக்ஸ் ரோடு முழுவதும் வணக்கம் சொல்லிற்று. பகடி இல்லாமல் எட்டடிக்கு எட்டடி கடை கிடைத்தது. போன் கிடைத்தது. வடிவேலு யோசித்தான். லாரி வாங்கி அதை எவனிடமோ ஓட்டக் கொடுத்து விரல் பின்னித் தவிப்பதை விட எவர் வண்டியிலோ எவர் சரக்கோ ஏற்றுவது உத்தமம் என்று தெரிந்தான். தண்ணித் தொட்டித் தெருவின் தலைசிறந்த தரகர் ஆனான்.

''எங்க மொதலியாரே, திருச்சிக்குப் பைப்பு போகணும்னு சொன்னீங்களாமே. எவ்வளோ எடை? ஒரு டன்னு ஏத்தலாம். கடையாண்டே கொண்ணாந்து போடுங்க. நாளை விடிகாலை போய்டும். எந்த லாரியா இருந்தா ஒனக்கென்ன? சரக்குப் போணுமா எங்கிட்ட விடு. சேட்டுக்கு என்ன தர. அதுல பத்து ரூபா கொறைச்சுக் குடு.''

நூறு ரூபாய் வாடகை வாங்கி லாரிக்காரனுக்கு சந்து இடத்தில் பைப் வைக்க நாற்பது ரூபாய் கொடுத்து மீதிக் காசை பாக்கெட்



ஹரியானா முதலமைச்சரான பஜன்லால் ஒரு சாதனை நிகழ்த்தியிருக்கிறார். கடந்த பிப்ரவரி மாதம் வரை அவர் முதலமைச்சராகப் பணியேற்று 280 நாட்கள் ஆகின்றன. 142 தடவைகள் டெல்லிக்கு விஜயம் செய்திருக்கிறார். அதாவது இரண்டு நாட்களுக்கு ஒரு முறை பஜன்லால் டில்லியைத் தரிசித்திருக்கிறார்!

வீக் எண்டிலிருந்து சேலம்சக்திக்கனல்

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.

2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'




வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!

மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TM

ஹோட்டல் சர்வரிடம் கணவன்: எங்க இரண்டு பேருக்கும் இட்லி, பூரி கொண்டு வா! இந்தக் குழந்தைக்கு மசால்தோசை கொண்டுவா!
மனைவி: என்னங்க, குழந்தைக்கு மசால் தோசையா!
கணவர்: கொண்டு வரத்துக்குள்ளே அவன் பெரியவன் ஆகிவிடுவான்!

—எல். ஸ்ரீனிவாசன்



டில் போட்டுக் கொள்வான். மேஜை அறை முழுக்கச் சுருள் சுருளாய் நோட்டுகள் இருந்தன.

இந்த வியாபாரம் தெரிந்து காந்தி லால் எதிர்த்தான். 'கூலிப் பசங்களைக் கைக்குள்ளாற போட்டுக்கிட்டுத் திருட்டுச் சரக்கா ஏத்தறே. கேஸ் போடுவேன்? என்றான்.

''ஊரை விட்டு ஊர் வந்து என்னைய மிரட்டறத்துக்கு என்ன துணிச்சல். நானைக் காலைபார்.நாயாருன்னு தெரியும்னைக்கு.''

மறுநாள் கூலி ஆட்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். கூலி உயர்வும், கூலிகளுக்கு உரிய மரியாதையும் வேண்டுமெனக் கேட்டார்கள். வட சென்னை முழுவதும் தக்காளி முட்டைக்கோஸ் இரண்டு நாள் நாறிற்று. எண்ணெய் டின்கள் வெயிலில் கிடந்தன. மீறி ஏற்றத் துணிந்த யாரோ அடிபட்டார்கள். இரண்டு லாரிக் கண்ணாடிகள் சிதறின.

எதிராளி பலம் தெரிந்து காந்திலால் உடனே சமாதானம் பேசினான். வடிவேலுக்குத் தன் லாரிகளில் குறைவான தன் ரேட்டில் சரக்கு ஏற்ற ஒப்புக் கொண்டான். ஒட்டு மொத்தமாய் வடசென்னை கூலிகளுக்குக் கூலி உயர்வு கொடுக்கப்பட்டது.

'நடந்தவை நடந்தவையாக இருக்கட்டும். இனி நடப்பவை நல்லவையாகஇருக்கட்டும்.' வடிவேலு எண்ணெய் டிரம்மில் ஏறிப் பேசியபோது தொழிலாளர்கள் வேலைக்கு மறுபடி போனார்கள். லாரிகள் ஓடின.

**மோ**ட்டார் சைக்கிளில் வந்து வடிவேலு கடை திறந்தான்.

''வாத்தியாரைக் காணமே. கோவிச்சுக்கினு மன்னார்குடி போயிட்டாரா?''

''அன்பு சால் தமிழ் ஐயா அவர்களுக்கு வடிவேலுவின் வணக்கம் பல. — ஒரு லெட்டர் எழுதிப் போடலாமா?'' 'த்தோடா த்தோடா, கிழவர் போவல. காந்தி கடைல ருந்து வராரு.'

''ஐயா வாங்க வாங்க.'' வடிவேலு கைகூப்பி அவசரமாய் எழுந்தான்.

நாராயணசாமி பயந்து பின் வாங்கினார்.

''வுழமாட்டேன். தகிரியமாய் வாங்க.''

நாராயணசாமி உட்கார்ந்து கொண்டார்.

''நேத்து நடந்ததுக்கு மன்னிப்புக் கேட்கிறேன்.'' வடிவேலு பவ்யமாய் அவர் கைகளைப் பிடித்துக் கொண்டான். தக்காளி அழுகல் வாசனை மாதிரி விஸ்கி வாசனை இன்னமும் வீசிற்று. ''நான் ராத் தூக்கம் இல்லாதவன். தொழிலு அப்படி. இது சாப்டாத்தான் தூக்கம் வரும். பழக்கமாயிடுச்சு ஐயா. மனசில வச்சுக்கக்கூடாது.'' குனிந்து காலைத் தொட்டான்.

கை கூப்பவும் காலைத் தொட்டு எழவும் வடிவேலு அதிகம் பழகியிருந்தான்.

''இருக்கட்டும், இருக்கட்டும். எனக்கு வேலை உண்டா இல்லையா சொல்லு.''

''ஐயா, இந்தக் கடையே உங்களுதுங்க. இது நீங்க போட்ட பிச்சை. நீங்க சொல்லிக் கொடுத்த தமிழ். இன்னிக்கு நான் நிமிர்ந்து நிக்கிறேன். என்னன்னு யோசிக்கிறீங்களா. நாத்திப் பத்தாவதுவட்டத்திலே இன்னிக்குக் கூட்டம் இருக்குதுங்க. நம்ம கட்சிக் கூட்டம். கொள்கை விளக்கக் கூட்டம். தலைமை நாந்தாங்க. ஐயா வரணும். இங்க வேலைன்னு ஒண்ணும் இல்லிங்க. ஒங்களுக்கு மரியாதை செய்யணும்னு ஒரு ஆசை. ஆசை என்ன, நன்றிக் கடன். அவ்ளோ தான். ஐயா சரின்னு சொன்னா அது என் அதிர்ஷ்டம். நீங்க தங்க இடம், தினசரி உங்க பகல் சாப்பாடு இரண்டு வேளை காப்பி டிபன் என் பொறுப்புங்க. நீங்க கடைல இருந்தாப் போதும். அதுவே எனக்குப் பெரிய பலம்.''

அதிமதுரம், சர்க்கரை, வெல்லம், தேன் எல்லாம் குழைத்துப் பேசினான்.

''இது என்ன கடை. அதை முதல்ல சொல்லு.''

''நான் லாரி புரோக்கருங்க. இரண்டு நாள்ல விவரம் உங்களுக்குப் புரிஞ்சிடும். உக்காந்த இடத்துல வியாபாரம்.''

போன் வந்தது. போடப்பட்டது.வந்தது.

காசு உள்ளே வந்த வண்ணம், வெளியே போன வண்ணம் இருந்தது. நாராயணசாமி மாலையில் மடமடவென்று மனகுக் கணக்குப் போட்டு நிகர லாபம் ஆயிரத்து நூற்று நாற்பது என்று புரிந்து கொண்டார். மாலையில் கூட்டத்துக்குப் போனார்.

''தலைவருக்கும், தாய்க் குலத்துக்கும், எனக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்த ஆசான் செந்தமிழ்ச் செல்வர் மறைவழி அந்தணர் எதிரே அமர்ந்திருக்கும் முதுபெரும் அறிஞர் நாராயணசுவாமி அவர்களுக்கும் என் பணிவு கலந்த வணக்கம் பல சொல்லிப் பேச ஆரம்பிக்கிறேன்''என்று துவக்கினான், சிவனே என்று உட்கார்ந்திருக்கும் நாராயணசுவாமி ஐயரைக் கூட்டம் எட்டி எட்டிப் பார்த்தது. அவருக்கு அந்தப் பார்வைகள் பயம் கொடுத்தன. இவனை விட அந்தக் காந்திலால் மேத்தா நிம்மதியான இடம் என்று தோன்றிற்று. நாளை காந்திலாலிடம் சகலமும் பேசிவிட வேண்டும் என்று முடிவு செய்தார்.

(தொடரும்)

# திருமண அழைப்பிதழ்



'சுபலேகா' தெலுங்கு

காலையில் மனைவியுடன் மோதல். எப்படிச் சமாதானம் செய்வது என்று புரியாமல் தவித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

அலுவலகம் முடிந்து மாலை நேரம் உங்கள் கைவசம். வீணாகாமல் மூன்று மணி நேரத்தைச் செலவழிக்க வழி தேடும் பிரம்மச்சாரி.

சக்கையும் குப்பையுமாய்ப் பார்த்துப் பார்த்துத் தியேட்டர் பக்கமே தலைவைக்கப் பயந்து கொண்டிருக்கிறீர்கள்.

மேற்சொன்ன எந்த வகையில் நீங்கள் சேர்த்தியானாலும் உங்களுக்கு ஒரு ஆறுதல் காத்திருக்கிறது.

கே. விஸ்வநாத் டைரக்ட் செய்திருக்கும் 'சுபலேகா'.

ஆரம்பக் காட்சியில் நாய் பேப்பரை வெளியில் தள்ளி விடும் காட்சியிலிருந்து பட்டம் கொடுத்துக் கௌரவிக்கிற மேடையில் ஒவ்வொரு சர்வராய் வந்து, மாலை போட்டுப் பணிவாய் 'லோஃபர்' என்று முணுமுணுத்து அரசியல் ஆதிசேஷய்யாவை உறும வைக்கிற காட்சிவரை மெலிதான நகைச்சுவை — முந்திரிப் பருப்பாய் படம் முழுக்கக் கடிபடுகிறது.

நளினமும், அழகான முத்திரைகளும் ஆண் பிள்ளைக்கும் கைவரும் என்பதற்குச் சிரஞ்சீவி உறுதியான சாட்சி. கண்களை உருட்டுவதும், கழுத்தைக் குலுக்குவதும், கைகளை நெளிப்பதும் அற்புத ஜாலங்கள். 'மூர்த்தி' பாத்திரத்தின் ஆழ, அகலங்களை அருமையாய் வெளிக் கொணர்கிறார்.

தோளைப் போர்த்தின புடவையும், பாதி மூக்கில் இறங்கிய கண்ணாடியுமாய் சுமலதா. கண் அசைவுகளிலும், உதட்டுச் சுழிப்புகளிலுமே நிறையப் பேசுகிறார்.

கல்லூரியில் அட்மிஷன் வாங்கிய விதத்தை ராக ஆலாபனையில் சக தொழிலாளிகளிடம் சிரஞ்சீவி தெரிவிப்பதும் வேடிக்கை பார்த்துக் கொண்டு வாடிக்கையாளர்களை மறந்த சர்வர்களைக் கடிந்து கொள்ள வருகிற முதலாளியிடம் சோகராகம் இழுத்து அவர் கண்ணில் நீர் வரவழைப்பதும் அசாத்தியக் கற்பனை. படம் முழுக்கச் சின்னச் சின்ன அசைவுகளிலும், விஸ்வநாத்தின் உழைப்பு தெரிகிறது. ஆனால் கிளைமாக்ஸில் கொஞ்ச நேரம் அந்த வரதட்சிணை எதிர்ப்பு டாகுமெண்டரி நல்ல விருந்தில் கடைசி ஐயிட்டம் உப்புக் கரிக்கிற மாதிரி!

லோக் சிங்கின் காமிரா விஸ்வநாத்தின் கற்பனைகளை உயிர் பெறச் செய்வதில் சிரத்தை காட்டியிருக்கிறது.

ஜனரஞ்சகமும் கர்நாடகக் கவர்ச்சியும் மகாதேவனுக்குக் கைவந்த கலை. பாடல்களும், படமாக்கிய விதமும், கதையோடு இழைந்து கவனத்தில் பதிகின்றன.

ஆட்சேபமின்றி அட்சதை தூவப் போகலாம்.

-ஜெய மன்மதன்

# நீங்கள் கேட்டவை — தராசு



பிரேம்நசீர்

✕ எம். ராஜேந்திரன், லால்குடி.

? நீங்கள் ஏப்ரல் முதல் தேதி ஏப்ரல் முட்டாளானது எங்ஙனம்?

! அதையேன் கேட்கிறீர்கள்! நடு ராத்திரி என் மகன் 'அப்பா! அம்மா கூப்பிடறு' என்று பரபரப்புடன் உலுக்கி எழுப்ப நான் என்னமோ ஏதோ என்று அலறி ஓட அவள் நிம்மதியாக உறங்கக் கண்டு திரும்பி வந்து 'என்னடா சொப்பனமா' என்று வினவ 'இல்லையே ஏப்ரல் 1 காலை மணி 12:30' என்று பதில் கிடைத்தது... காலை ஐந்து மணிக்கு எழுந்து எழுதப் பேனா எடுத்தால் இங்க் இல்லை; பால் பாயிண்ட் பேனாவில் ரீஃபில் இல்லை, பாட்டிலில் இங்க் இல்லை, பென்சிலில் லெட் இல்லை... காலைப் பேப்பரைப் பிரித்தால் நடுப்பக்கங்களைக் காணோம்... முதல் பக்கத்தில் கவர்ந்த செய்தியைப் படித்தபடியே காப்பி டம்ளரை எடுத்து உறிஞ்சினால் வெறும் வெந்நீர்... போதுமடா சாமி!

✕ கே. ராஜகோபாலன், மதுரை.

? பிரேம் நசீர், 1984-ல் கட்சி ஆரம்பிக்கப் போகிறாராமே? பத்மபூஷணுக்கு என்ன ஆயிற்று? ★

! அரசியலையே தொழிலாகக் கொண்டிராமல் வேறு தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் அரசியலுக்கு வருவது நல்லது. வேறு எதற்கும் லாயக்கில்லாதவர்கள் அரசியலில் புகுந்து பணம் பண்ணுவது ஒன்றையே குறிக்கோளாகக் கொள்வதை விட டாக்டர்கள், வழக்கறிஞர்கள், இன்ஜினியர்கள் போன்ற பலர் அரசியலில் புகுந்தால் லஞ்ச ஊழலும் குறையும். அறிவாளிகள் நம்மை ஆளவும் வழி பிறக்கும். ஒருவர் சினிமா நட்சத்திரம் என்பதாலேயே அவரை மட்டமாக எடை போட்டு அவர் அரசியல் அபிலாஷைகளைக் கிண்டல் செய்ய வேண்டாம். அரசியலில் புக அவருக்குத் தகுதிகள் உள்ளனவா என்றுதான் பார்க்க வேண்டும்.

✕ லட்சுமி செங்குட்டுவன், வேலூர் (சேலம்)

? பிரதமரை வரவேற்கச் சென்ற எதிர்க்கட்சித் தலைவரிடம் ஒரு போலீஸ் அதிகாரி காட்டுமிராண்டித் தனமாக நடந்து கொண்டதைப் பார்த்தும் அ.தி.மு.க அரசு வாய்மூடி இருப்பது அவசியமா?

! வாய் மூடிப் பேசாமலிருந்தால் எவ்வளவோ



இந்திரா

தேவலாமே! ஏதோ ஒரு போலீஸ் அதிகாரியின் அறியாமை என்று ஒதுக்கி விட்டுப் போய் விடலாம். ஆனால் நெடுஞ்செழியன், சட்ட மன்றத்தில் பேசுகையில் கவர்னர், முதலமைச்சர், எதிர்க் கட்சித் தலைவர், இ. காங்கிரஸ் கட்சித் தலைவர் ஆகிய நால்வரும் விமானத்தின் அருகே சென்று பிரதமரை வரவேற்கலாம் என்று தாம் தலைமைச் செயலாளரிடம் சொன்னதாகவும், ''அந்த ஏற்பாடு எப்படி மாறியது என்று தெரியவில்லை: மாறியதற்கு வருந்துகிறேன்'' என்றும் கூறுகிறார். முதலமைச்சரோ திருச்சியில் நிருபர்களிடம் பேசுகையில், ''போலீசார் கடமையைச் செய்திருக்கிறார்கள். அப்போது கருணாநிதி பின் தள்ளப் பட்டிருக்கலாம்'' என்கிறார். இப்படி முதலமைச்சரும், நிதியமைச்சருமே கருத்து மாறுபட்டுப் பேசினால் மக்கள் தலையைப் பிய்த்துக் கொள்ளவேண்டியதுதான். அமைச்சரவையே அடிக்கடி சந்தித்து எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ளவில்லை எனில் பாவம், அதிகாரிகள் நிலையை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது!

✕ ஆர். ஜே. அருண், அன்னவாசல்.

? என். டி. ஆர். ஆஸ்தான கவி பட்டத்தை நீக்கி விட்டாரே?

! 'அதெல்லாம் ராஜா–ராணி காலத்திய சமாச்சாரம். ஜனநாயகத்தில் இதற்கெல்லாம் இடமில்லை' என்ற என். டி. ஆரின் வாதத்துக்குப் பக்க பலமாக அரசியல் சாசனமே இருக்கிறது. ஆட்சியில் இருப்பவர்கள் அவ்வப்போது தங்கள் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்பச் சில கலைஞர்களை ஆதரித்துச் சிலரை இருட்டடிப்பு செய்து தவிக்க விடுவதை விட ஒட்டு மொத்தமாய் அனைவரும் தத்தமது சுய பலத்தில் நின்று தத்தமது ஆற்றலுக்கு ஏற்ப மக்கள் ஆதரவைப் பெற முயல்வதே நல்லது. சிக்கனத்தைக் கருதி ராமாராவின் மேற்கொண்டுள்ள பல சீர்திருத்த நடவடிக்கைகள் சிலருக்குக் கோபத்தை உண்டாக்குவது இயல்பு எனினும் வரவேற்கப்பட வேண்டியவை.



வீரமணி

✖ திருமதி பிரசன்னா ராஜன், கும்பகோணம்.

? தமிழர்கள் எதை நினைத்து வெட்கமும் வேதனையும்பட வேண்டும்?

! வெட்கமும் வேதனையும் பட வேண்டிய விஷயங்கள் எத்தனையோ உள்ளனவே என்பதற்காகவே வெட்கமும் வேதனையும் படலாம். எனினும் இப்போதைக்கு வேலாயுதம்பாளையம் சம்பத்தின் ஒரு கேள்வியை மட்டும் உங்களுக்குப் பதிலாக்குகிறேன். அவர் கேட்கிறார்: நாட்டின் மொத்த லாட்டரி விற்பனையான ரூ. 250கோடியில் ரூ. 150 கோடி சீட்டுக்கள் தமிழ் நாட்டில்தான் விற்பனையாகின்றன என்ற அமைச்சர் நெடுஞ்செழியன் அறிவிப்பைப் படித்தபோது என்ன நினைத்தீர்கள்? திருமதி பிரசன்னா ராஜனின் கேள்வியை நினைத்தேன் என்று இவருக்குப் பதில் கூறி விடுகிறேன்!

✖ த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? சர்வதேச ஒருநாள் கிரிக்கெட் போட்டியில் இந்திய அணி வெற்றி பெற்றது குறித்து?

! காரிருளில் ஒரு மின்னல். மின்னலைக் கிளப்பிய மேகங்கள் கபில், கவாஸ்கர். இடி முழக்கம்: இந்தியக் கிரிக்கெட் ரசிகர்களின் மகிழ்ச்சி ஆரவாரம்.

✖ மேஜர் தாசன், ஈரோடு-10.

? துணுக்கு எழுத்தாளருக்குத் தாங்கள் கூறும் அறிவுரை என்ன?

! ஜோக்குகளைக் காப்பி அடித்து எழுதாதீர்கள். உங்களைச் சுற்றி நடப்பனவற்றைக் கவனித்தால்



○ கருணாகரன்

புதிது புதிதாக ஜோக் உருவாக்க எத்தனையோ விஷயங்கள் அகப்படும். எந்த மாதிரி உத்திகளையெல்லாம் கையாண்டு ஜோக்குகளை உருவாக்கலாம் என்பதைத் தெரிந்து கொள்ளப் பிற ஜோக்குகளைப் படிக்க வேண்டுமே தவிர காப்பி அடிக்க அல்ல. (2) வசவசவென்று ஏராளமாய் எழுதி அனுப்பாதீர்கள். எழுதிய பின் ஒரு நாள் பொறுத்து மறுபடி படித்து அல்லது நண்பரைப் படிக்கச்சொல்லி நல்லனவற்றைத் தேர்ந்தெடுத்து அனுப்புங்கள். (3) ஒவ்வொருஜோக் அல்லது தகவல் துணுக்கையும் தனித்தனித்தாளில் எழுதுங்கள். (4) பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திரும்பப் பெற ஸ்டாம்பு வைத்து அனுப்புங்கள். (5) என் ஜோக்



○ கவாஸ்கர்

என்ன ஆயிற்று என்று கேட்டுக் கடிதம் எழுதாதீர்கள்!

✖ கே. சங்கர், சென்னை-17.

? இந்திராதமிழ்நாட்டுக்குவந்ததால் யாருக்கு லாபம்?

! பழைய மாம்பலம்வாசிகளுக்குஒரு நாள் தாராளமாகத் தண்ணீர் கிடைத்தது லாபம்.

✖ வெ. சியாமளா ரமணி, மின் பாறை.

? அது என்ன ஸார் அய்யம் பேட்டை வேலென்றது?

! நீங்கள் கேள்வியை எழுதியுள்ள விதமே ஒரு அய்யம்பேட்டைவேலைதான்! எனவே அதை மின் பாறை வேலை என்றும் கூறலாம். அய்யம் பேட்டை, கும்பகோணம் என்றெல்லாம் தூற்று

# பிரேம்நசீர் கட்சி ஆரம்பிக்கப் போகிறாராமே?

வானேல்? நல்லவர் பொல்லாதவர் எங்கும் உண்டு.

✖ வி. கே. துரைசாமி திருச்சி-5.

? சமீபத்தில் வல்லத்தில் சோ. வீரமணிக்கும் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தது பற்றி...?

! இதிலென்ன அதிசயம்? ராஜாஜி பெரியாரை மதித்துப் போற்றவில்லையா என்ன? கருத்து மாறுபாடுகள் இருப்பினும் நண்பர்களாகவும், ஒருவரை ஒருவர் மதிக்கத் தெரிந்த பண்புள்ளவர்களாகவும் இருப்பது ஜனநாயக நாகரீகம்.

✖ என். அம்புஜம், சென்னை-5.

? மாநிலங்களை மத்திய அரசு முனிசிபாலிடிகளைப் போல் நடத்துகிறது என்று முன்னாள் ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி கூறியுள்ளாரே?

! அவர் கூறியது சரி. இந்நிலை மாறவேண்டும். 'சஞ்சீவ ரெட்டி இன்று தானே பேசுகிறார்? ஜனாதிபதியா யிருந்த போது என்ன செய்தார்?' என்று கேட்பது சரியல்ல. ஜனாதிபதியாக இருந்தவரை அவரால் பகிரங்கமாக மனம் இறந்து பேசியிருக்கமுடியாதுகூடாது.

✖ வண்ணை கணேசன், சென்னை-11.

? காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்-இப்போது யாருக்குப் பொருந்தும்?

! கருணாகரன்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:-

கே. ராஜகோபாலன்,
D4, தங்கமணி தெரு,
திருநகர், மதுரை-625 006.



# இலவசம்



முதல் பரிசு:

**பிலிப்ஸ் கேஸட் ரிகார்டர்**

இரண்டாம் பரிசு:

**ராலி டேபிள் ஃபான்**

மூன்றாம் பரிசு:

**பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர்**

100 ஆறுதல் பரிசுகள்:

**தலா ஒரு**
**கல்கி விடுமுறை மலர்**

இந்தப் பக்கத்தைக் கத்தரித்து எடுத்துப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். உறையின்மேல் **"வாசகர் விமர்சனம்"** என்று கண்டிப்பாகக் குறிப்பிடவேண்டும். குலுக்கல் முறைப்படி பரிசுக்குரியவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவர். உங்கள் கருத்துக்களை அறிவது உங்களுக்கு மேலும் சிறப்பான முறையில் சேவை புரிய எங்களுக்கு உதவும். எனவே உண்மையையே மனம் விட்டு எழுதுங்கள். அவை ரகசியமாகவே இருக்கும். **முடிவு தேதி 2-5-83.**

1. வாசகரின் பெயர்

2. விலாசம்

3. வயது

4. எவ்வளவு காலமாகக் கல்கி வாசித்து வருகிறீர்கள்?

5. உங்களைத் தவிர உங்கள் வீட்டில் எவ்வளவு பேர்கள் கல்கி வாசிக்கிறார்கள்?

6. உங்கள் நண்பர்கள் அல்லது அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் எவ்வளவு பேர்கள் உங்கள் கல்கிப் பிரதியை வாங்கிப்போய் வாசிக்கிறார்கள்?

7. உங்கள் மாத வருமானம் சரியான கட்டத்தில் ✓ குறியிடவும்.
☐ ரூ. 250 முதல் ரூ. 500. ☐ ரூ. 500 முதல் ரூ. 750. ☐ ரூ. 750 முதல் ரூ. 1000. ☐ ரூ. 1000 முதல் ரூ. 2000. ☐ ரூ. 2000க்கும் மேல்.

8. உங்களிடம் கீழ்க்கண்ட பொருள்கள் உள்ளனவா? அந்தந்தக் கட்டத்துக்கு எதிரே ✓ குறியிடவும்.
☐ கார் ☐ ஸ்கூட்டர் ☐ மோட்டார் சைக்கிள் ☐ டெலிவிஷன் ☐ ரேடியோ ☐ ஃப்ரிட்ஜ் ☐ ஸ்டீரியோ ☐ டேப்ரிக்கார்டர்.

9. உங்கள் படிப்பு விவரங்கள் அந்தந்தக் கட்டத்துக்கு எதிரே ✓ குறியிடவும்.
☐ 8வது வகுப்பு வரை ☐ 10வது வகுப்பு வரை ☐ பினஸ் 2 அல்லது பி.யூ.ஸி வரை. ☐ பட்டதாரி ☐ மேல் பட்டப் படிப்பு ☐ வக்கீல் ☐ டாக்டர் ☐ இன்ஜினீயர் ☐ பள்ளி ஆசிரியர்.

10. கல்கியில் தங்களுக்குப் பிடித்தமான பகுதிகள் எவை?
மிகவும் பிடித்தவை:

சுமாராகப் பிடித்தவை:

11. கல்கியில் தங்களுக்குப் பிடிக்காத பகுதிகள் எவை?

12. தாங்கள் வேறு ஏதாவது புதிய பகுதிகளைக் கல்கியில் புகுத்த வேண்டும் என்று விரும்புகிறீர்களா?

கையொப்பம்

# அடுத்த சிரிப்புத் தொடருக்குக் காத்திருக்கிறேன்!

● 27.3.83 இதழில் ''பாட்டைப் பாழாக்கி விட்டாரே'' என்ற தலைப்பில் அ. ராஜ கோபாலன் கடிதம் வட்டமேஜையில் பார்த்தேன்.

தவறுதான். வெகு நாளாகவே 'சாரம் உதைத்த சரமழை' என்று மனனமாகி யிருக்கிறது எனக்கு. திருத்திய நேயருக்கு நன்றி.

ஆனால் ''சங்கீதத்தை வம்புச் சண்டைக்குச் சந்திக்கு இழுக்கிறேன்'' என்ற மொழிகள் சரியில்லை.

எதுபற்றியும் கேள்வியின்றி ஏற்றுக் கொள்கிற மனோபாவனை, பல விஷயங்களை உயர்வு என்றும், தாழ்வு என்றும் பிரித்துவைத்திருக்கிறது. உசத்தி என்று சொல்கின்றதை உரைத்துப் பார்ப்பதும் தாழ்வு என்பதை ஆராயக்கேள்வி கேட்டுக்கொள்ளலும் ஆரோக்கியம்.

சென்னை. பாலகுமாரன்.

● 3.4.83 இதழில் ''ஒரு பத்மவிபூஷண் பேசுகிறார்!'' படித்தேன். ''நேற்று நடந்தவை முக்கியமல்ல. இன்று நடப்பனவும் நாளை நடக்கப் போவனவும் தாம் முக்கியம்'' என்று ஐயர் அடிக்கடி கூறுவார். அவர் பேட்டி தர மாட்டேனெனப் பிடிவாதம் செய்ததற்குக் காரணம் இந்த மனப்பான்மையே. எனினும் இவரைப் போன்ற தன்னலமற்றவர்கள் வாழ்க்கை பிறருக்கு எடுத்துக் காட்டு என்பதால் தாங்களும் விடாப்பிடியாகப் பேட்டி பெற்றுப் பிரசுரித்தது நல்லது. ஆனால் ஒன்று. அவருக்குத் தரப்பட்ட விருது பத்மபூஷண் தான். பத்ம விபூஷண் அல்ல. பத்மவிபூஷணுக்கே அவர் தகுதி உடையவர் என்பது வேறு சமாசாரம்!

திருவான்மியூர். ருக்மிணி ராமச்சந்திரன்.

● இத்தனை வாரமாக எங்களைப் பல கவலைகளின் நடுவில் சிரித்து மகிழ வைத்துக்கொண்டிருந்த ''வீடியோ வரை காத்திரு'' முடிந்து விட்டதே என்று ஆதங்கப்பட்டாலும் எதற்கும் ஒரு முடிவு உண்டு என்பதை நினைவில் கொண்டு எனக்குள் நானே சமாதானமானேன்.

மே. மாம்பலம். எஸ். மோகன்.

● ''வீடியோ வரை 'காத்திரு'' படக் கதையை விரைவிலேயே முடித்ததற்கு என் நன்றி! படு அறுவையாக இருந்தது.

பரசலூர். ஆர். நாகராஜன்.

● அடங்கொப்புரானே! பன்னிரண்டுவாரங்களுக்குள் நகைச்சுவையும் சிலேடையும்கலந்த சொல் விளையாட்டுக்கள் எத்தனை எத்தனை...! இம்மாதிரி இன்னும் ஒரு சித்திரத் தொடரை 'கல்கி' வழங்க நாங்கள் இன்னும் எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டும்?

சென்னை–35 சி. பூபால் சிங்.

● பாரதி நூற்றாண்டில் பெண் விடுதலை எந்த அளவில் இருக்கிறது? என்பது பற்றிக் கூறுகையில் திருமதி அஞ்சலி தபானந்த் 'ஆண்களுக்குச் சுதந்திரம் இருக்கிறதா?'' என்று கேட்டிருப்பது அருமையான சிந்திக்க வேண்டிய வினா.

திருவாரூர். ஜெ. ஜெயராமன்

● தென் மாநில முதல்வர்கள் கூடிப் பேசியதால் மத்திய அரசுக்கு எரிச்சலூட்டியதையும் நல்ல குடிமக்கள்மனத்தில் வீண் சந்தேகத்தை விதைத்ததையும் தவிர எந்தவித புரட்சியும்




ஏற்பட்டு விடவில்லை. அது ஒரு புரட்டுதான். நான்கு முதல்வர்களும் கூடித் தங்களுக்கு இடையேயுள்ள பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு முயற்சி எடுத்து வெற்றி பெற்றிருந்தார்களானால் அதைப் பாராட்டலாம். முதலில் காவிரிப் பிரச்னையை இருமுதல்வர்களும் பேசித் தீர்த்துக் கொள்ளட்டும். அப்பொழுது தெரிந்து விடும் கவுன்சிலின் வெற்றி.

மேலப்பாலையூர். கமாலி.

● ''புரட்சி ஓங்குக'' தலையங்கம் பெரும்பான்மையினரின் கருத்தைப்பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது.

இம்மாதிரி 'முதல்வர்கள் சந்திப்பின்' போதெல்லாம் தனிப்பட்ட முறையில் அவர்களுக்குள் நெருக்கம் ஏற்படுகிறது. இந்த நட்பு அல்லது நெருக்கம் (Personal Relationship) மாநிலங்களைப் பாதிக்கும் பிரச்னைகளை அலசும்போது பெரும் உதவியாய் இருக்கும் என்பதில் ஐயமில்லை.

திருச்சி–17. அலெக்ஸ் ஃபெலிஸியா.

● பாடகரின் வாய்ப் பாட்டுடன் பக்க வாத்தியக்காரர்களின் இசையும் நன்கு அமைந்திருந்தால் எப்படி 'டீம் ஒர்க்' சிறப்பாக அமையுமோ அது போன்று மகாராஜபுரம் சந்தானம் அவர்களின் அட்டைப்படமும், அவரது பேட்டியும் சிறப்பாக அமைந்திருந்தன.

லால்குடி. எம். ராஜேந்திரன்.

# வளமான புத்தாண்டு

# ருத்ரோத்காரி

வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்த மென்றுணரற் பாற்று. - [குறள்]

ஆம்! 'வாழும் உயிர்களுக்கு வான் மழையாம் அமிழ்தம்' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு இணங்க, வாடிய பயிர் கண்ட வான்மழையாக, தண்புனல் ஊற்றாகப் பொங்கிப் பெருகி வருகிறது இனிய புத்தாண்டு — ருத்ரோத்காரி!

இந்த நல்லினிய பொன்னாளில், உலகமெல்லாம் பருவமழை ஒத்தபடி பெய்திடவும், உழவரெலாம் தானியத்தை உவப்புடனே பெருக்கிடவும், நீர் வளமும் நிலவளமும் நிறைசெல்வம் ஓங்கிடவும், நேர்த்தாரும் இயற்கைத்தாய் நிலவொளியாய் சிரித்திடவும் இறைவனைக் கரம்கூப்பி இறைஞ்சுகிறோம்.

தரமான தானியத்தைக் கொள்முதல் செய்து, தேவையான இடங்களுக்கு விரைவாக எடுத்துச் சென்று, நாடு முழுவதும் நியாய விலையில் சீரான பங்கீடு செய்வதுடன் கோடிக்கணக்கான மக்களின் உணவு தேவையைப் பூர்த்தி செய்கிறது. அதோடு எதிர்பாராத விதத்தில் ஏற்படும் தட்டுப்பாடுகளைத் தவிர்த்திட மிகப்பெரிய அளவிலே உணவு தானியங்களைச் சேமிக்க விஞ்ஞான ரீதியான கிடங்குகளையும் நவீன அரிசி ஆலைகளையும் நிறுவி நிர்வகித்து வருகிறது இந்திய உணவு கார்ப்பொரேஷன்.

ஆண்டுதோறும் லட்சக்கணக்கான டன் உணவு தானியங்களைக் கொள்முதல் செய்து, உலக அரங்கில் மிகப் பெரிய பொது வினியோக நிறுவனமாக விளங்குகிறது, இந்திய உணவு கார்ப்பொரேஷன்.



भारतीय खाद्य निगम

FOOD CORPORATION OF INDIA



# மரபுக் கவிதைக்கு மறுபடி வசந்தம்

வைரமுத்து

சில மாதங்களாகவே என் இதயம் வலிக்குமளவுக்கு நினைத்துவந்த ஒரு விஷயத்தைக் கல்கியில் முதன் முறையாகப் பதிவு செய்கிறேன்.

தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்களே!

இலக்கணம் கற்ற இளைஞர்களே!

மரபுக் கவிதை மாண்டுவிடுமோ என்று அதன் தலைமாட்டில் நின்று விசிறிக் கொண்டிருப்பவர்களே!

இல்லை — இறந்து போய் விட்டது என்று விசும்பிக் கொண்டிருப்பவர்களே!

இதோ, உங்கள் பக்கம் நான் வருகிறேன்.

அல்லது என் பக்கம் நீங்கள் வாருங்கள்.

முதலில், உங்களுக்கெல்லாம் ஓர் உத்தரவாதம்.

மரபுக் கவிதையென்பது சாகும் சங்கதிஅன்று!

ஈராயிரம் ஆண்டுகளாய் விழுதிறக்கிய விருட்சம் அது.

அதன் வேர் கரையான்களால் அரிக்க முடியாத ஆழத்தில் இருக்கிறது.

ஆயிரமாயிரமாண்டுகளாய்அசையாதிருக்கும் மரபு மாளிகையைப் புதுக் கவிதை என்னும் ஐம்பதாண்டுச் சக்தியா அழித்துவிடப் போகிறது?

நான் உள்ளிட்ட என் நண்பர்கள் எல்லாம் புதுக் கவிதைக்கு அங்கீகாரம் பெறவே போராடினோமேயன்றி மரபை மாய்த்துவிட அன்று.

ஓர் உலக இலக்கிய வடிவத்தை ஏறெடுத்துப் பார்க்காமல், தமிழின் கண்களைத் தைத்துவிடக்கூடாதே என்று நாங்கள் தவித்த தவிப்பே புதுக் கவிதை என்னும் போராவேசம்.

போதும்!

புதுக் கவிதைக்கு ஒரு பொன்னாசனம்கிடைத்து விட்டது.

அந்தத் தீராத மகிழ்ச்சியில் திரும்பிப் பார்க்கிறேன்.

அடடே!

மரபுக் கவிதை இங்கே மண்டியிட்டுக் கிடக்கிறதே!

பரிதாபம்!

அந்த இலக்கண எலும்பில் உயிர் இன்னும் கொஞ்சம் ஒட்டியிருக்கிறது.

மரபின் கண்களில் மரண பயம்.

போதும் புலவீர்காள்!

எங்களை மன்னித்துவிடுங்கள்.

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்று முழங்கி விட்டு வெளிநாட்டுக்காரனுக்கு விருந்து கொடுத்தோம்.

திடீரென்று பார்த்தால், உள்ளூரில் பட்டினிச் சாவுகள் பலவாகிவிட்டன.

புதுக் கவிதை மகுடம் அணிந்துவிட்டது பற்றி மகிழ்ச்சி.

மரபுக் கவிதை சாகக் கிடப்பது எமக்குச் சம்மதமில்லை.

இனி, புதுக் கவிதையின் மின்சார அலைகள் மரபுக் கவிதைக்குள் பாய்ச்சப்படும்.

புதுக் கவிதையின் புது ரத்தம் மரபுக் கவிதைக்குள் பீச்சப்படும்.

இடையில் நிகழ்ந்த விபத்து யாது?

நன்றாகச் சிந்திக்கத் தெரிந்த பலர் மரபின் பரிமாணம் அறியாதவர்களாகஇருக்கிறார்கள்.

மரபுக்காகவே உயிர் விடுவோம் என்று மார் தட்டுபவர்கள் பலர் கற்பனையிலும்,சிந்தனையிலும் சகாராவின் சகோதரர்களாகி விட்டார்கள். இலக்கணத் தெளிவும் கற்பனை வளமும் செறிந்தவர்கள் மரபை நிரந்தரமாகவே விவாகரத்துச் செய்து விட்டார்கள்.

புதுக்கவிதைக்காரர்கள் எடுத்துக் கொண்ட பாடுபொருளை மரபுக் கவிஞர்கள் மறுதலித்து விட்டார்கள்.

எனவே அண்மைக்கால மரபுக் கவிஞர்களை இலக்கிய வரலாறு மறுதலித்து விட்டது.

கோளாறு மரபிலில்லை; அதைக் கையாள்கிறவர்களின் கைகளில் என்பதை நிகழ்காலம் நிரூபித்திருக்கிறது.

ஆனால், கால காலமாய், தமிழ் கர்வப்பட்டுக் கொள்ளக்கூடிய மரபெனும் வீணை வீதி மண்ணில் வீழ்ந்து கிடக்கலாமோ?

கூடாது.

அதன் தந்திகளில் எங்கள் புதிய கரங்கள் புகவேண்டும்.

தமிழ்க் கவிதை இனி ஒரு புதிய தொனியில் பேசப் போகிறது.

தங்களின் பழைய பரண்களில் உட்கார்ந்திருக்கும் தமிழ்ப் புலவர்களே!

இலக்கணம் கற்ற இளைய ரத்தங்களே!

மரபுக் கவிதையை ஒரு பூவனமாய்ப் புனரமைப்போம்.

அடுத்த இதழில் நான் தொடங்கி வைக்கிறேன்.

நீங்கள் தொடருங்கள்.

படம்: உத்ரா

## அன்பளிப்புத் தருவதிலே அனேக தொல்லைகள்...
### அவற்றை உங்களால் போக்கமுடியும்...



**அன்பளிப்பைத் தேர்ந்தெடுப்பது**
அவ்வளவு சுலபமான வேலையல்ல... கடைக்குக் கடை, கல்லாவுக்குக் கல்லா சுற்றவேண்டியிருக்கிறது. சுவர் அல்லது கடிகாரம்? போட்டோ ஆல்பம் அல்லது மேஜை விளக்கு? இவற்றில் எதை வாங்குவது? முடிவுகள், முடிவுகளுக்கு முடிவே இல்லை. முடிவில் என்ன பயன்? விட்டுத் தள்ளுங்கள்!



**மூடிய உறைகளிலே— எத்தனையோ சிக்கல்கள்**
கத்தரிக்கோலால் வெட்டி காகிதத்தை நீக்கவேண்டும். பசையையும் செல்லோ டேப்பையும் போக்கவேண்டும். திருப்பித் திருப்பிச் சுற்றவேண்டும். இத்தனை சிரமத்துக்குப் பிறகு பயன்? எல்லாமே ஒரே குழப்பம்! அதைத்தான் நீங்களே பார்க்கிறீர்களே!



**அதைச் சுமந்து செல்ல வேண்டும்.**
கனமானது, எளிதில் உடைந்து விடுமென்ற அச்சம் ஒருபுறம். சமாளிக்க முடியாமல் திணறுவது மறுபுறம். பஸ்ஸில் எப்படி எடுத்துச் செல்வது. தூக்கிக்கொண்டு எப்படித்தான் சாலையில் நடப்பது... இதுபோன்ற இக்கட்டான நிலையை உங்களால் தவிர்க்க முடியும்...

இவை எல்லாவற்றையும்விட, பெரிய பிரச்னை— நீங்கள் வாங்குவது பொருத்தமான பரிசாக இருக்காது. வேறு யாரேனும் அதேபோன்ற அன்பளிப்பை உங்களுக்கு முன்னேயே தந்திருக்கக்கூடும்.

## எந்தவித பிரச்னையும் ஏற்படாதவாறு அன்பளிப்பைத் தாருங்கள்—
### கார்ப்பொரேஷன் பாங்க் அன்பளிப்புச் செக்குகள்



**4 கண்கவரும் டிசைன்களில், மதிப்பினங்களில்**
தேர்ந்தெடுக்க சுலபமானது. 4 எழில் மிக்க பூவேலைப்பாடுள்ள டிசைன்கள். பணம் இதுபோல் பரிசளிக்கத் தக்கதாக இதுவரை இருந்ததில்லை. 4 வசதியான மதிப்பினங்களில், ரூ. 11, 25, 51 அல்லது 101. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் உகந்தது, எல்லோர் பட்ஜெட்டுக்கும் ஏற்றது.



**பிரத்தியேகமான கவர்— உங்களுக்கே உரியது**
விசேஷமாக டிசைன் செய்யப்பட்டவை. அழகான வேலைப்பாடுகளினால் அலங்கரிக்கப்பட்டவை. போதுமான இடவசதி. உங்கள் பெயருக்கும் கையொப்பத்துக்கும் போதுமானது. செருகிவிட்டு நீங்காத நினைவுப் பொருளாகிவிடுகின்றன.



**வாங்குவது சுலபம், கொடுப்பது எளிது**
நீங்கள் கார்ப்பொரேஷன் பாங்கின் எல்லாக் கிளைகளிலும் அன்பளிப்புச் செக்குகளை வாங்கமுடியும் அல்லது ரொக்கமாக மாற்ற முடியும்.

நீங்கள் அன்பளிப்புச் செக்குகளை கொடுக்கும்போது எதையும் வாங்குவதற்கோ அல்லது பணத்தைச் சேமிப்பதற்கோ உரிய சுதந்திரத்தையும் தருகிறீர்கள்.

**கார்ப்பொரேஷன் பாங்கின் எல்லாக் கிளைகளிலும் கிடைக்கின்றன.**






**கார்ப்பொரேஷன் பாங்க்**
நிருவாக அலுவலகம்: மங்களூர்.

SURYA-808-TAM

**[1]**

முடிவேயில்லாமல் திட்டுத் திட்டாகப் படையெடுத்த கனவுகளுக்கு இடையே திக்குத் தெரியாமல் நீந்திக் கொண்டிருந்த பத்மா சட்டென்று ஒரு விநாடியில் உறக்கம் கலைந்து கண் விழித்தாள்.

ஜன்னல் ஓரத்துக் கட்டிலில் கால்களை நேராக நீட்டி ஒருக்களித்துப் படுத்திருந்தவள் உடலை மெல்ல அசைத்து நெளித்துக் கரங்களை உயர்த்தி முறுக்கிச் சோம்பலை விரட்டியடித்தாள்.

ஒரு மாத விடுமுறையைக் கழிக்க ஆயிரம் விளக்கில் இருக்கும் சித்தப்பா வீட்டுக்குச் சென்றிருந்தவள் முந்தின மத்தியானம் தான் அந்த விடுதி அறைக்கு மறுபடியும் குடிவந்தாள்.

அந்த மகளிர் விடுதியின் இரண்டாவது மூன்றாவது மாடிகளை ஹவுஸ் சர்ஜன்களும், மூத்த மாணவியரும் ஆக்கிரமித்தனர். பூமி மட்டத்தில் தெற்குக் கோடியில் இருக்கும் இந்த அறை சென்ற ஆண்டு புதிதாகக் கல்லூரிக்குள் கால் வைத்த பத்மாவுக்காகவும் டெய்சிக்காகவும் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

எப்போது விடுமுறை முடியும் என்று சித்தப்பாவின் அறையில் நாட்களை எண்ணிக் கொண்டு காத்திருந்த பத்மா 'தப்பினோம் பிழைத்தோம்' என்று விழுந்தடித்துக் கொண்டு ஓடிவந்தாள். விடுதி வாசலில் மத்தியானத்து மர நிழலில் சூட்கேசுடன் ஆட்டோவிலிருந்து இறங்கியபோது அவளிடமிருந்த கிளர்ச்சியும் பரபரப்பும் இப்போது பன்மடங்கு விரிந்து, ஒருவித மகிழ்ச்சியும், காரணமற்ற அமைதியின்மையும் சேர்ந்து, அவள் நெஞ்சை அடைத்தன.

பின்பக்கம் மாமரங்களின் அடர்த்திக்குள் சீக்கிரமாக விழித்துக் கொண்ட குயில் 'கூ...வ் கூ...வ்' என்று குரல் எழுப்பிய வண்ணமிருந்தது.

இந்தக் குயில்தான் உறக்கத்தைக் கலைத்திருக்கிறது. முன்பெல்லாம் நாலைந்து குயில்கள் மாறி மாறிக் கூவும். பக்கத்து ஆண்கள் விடுதியிலிருந்த மாணவன் ஒன்றைத் துப்பாக்கியால் சுட்டு விட்டதால் எல்லாமே இடத்தைக் காலி செய்துவிட்டன. வெகு நாட்களுக்குப் பிறகு ஒன்று திரும்பவும் வந்திருக்கிறது. பாவம், இதற்கு எந்த ஆபத்தும் வரக்கூடாது.

மறுபக்கம் புரண்டாள். இரவில் டெய்சி அவள் தலையில் சூட்டி விட்டிருந்த மதுரை மல்லிகையால் தலையணை கமழ்ந்தது. தலையைத் தூக்கிப் பார்த்தாள். அந்த அறைக்குள்ளிருந்த இன்னொரு கட்டிலில் டெய்சி போர்த்திக் கொண்டு சுருண்டு கிடந்தாள். அவளுடைய தலைமாட்டில், மேஜை மீது, சுழல் மின் விசிறி பளபளவென்ற முகத்தை இடமும் வலமுமாகத் திருப்பிய வண்ணம் இயங்கியது. டைம்பீஸ் ஐந்தரை காட்டியது.

நெடுஞ்சாலையிலிருந்து வாகனப் போக்குவரத்தின் உறுமல்களும் ஹாரன் இரைச்சல்களும் வெடித்துப் பரவ ஆரம்பித்துவிட்



டன. இனி தூங்க முடியாது. தூக்கமும் வராது. எழுந்தாள்.

பத்மா மாநிறத்தை விடப் பிரகாச மாக இருந்தாள். நீண்ட கரங்களுடன் ஒல்லியாக இருந்தாள். வெள்ளையில் பெரிய நீலப் பூக்கள் அச்சிடப்பட்ட பருத்தித் துணியிலான விலை மலிந்த இரவு உடை அவள் தோள்களில் படிந்து பாதம் வரை வடிந்து அவளை வளர்த்தியாகக் காட்டியது. பருமனான ஒற்றைப் பின்னல் வலது தோள் வழியே மார்பில் பாய்ந்து வழிந்தது. சிவந்து கனிந்த முழுமையான இதழ்கள். நெற்றி மிகவும் விசாலம். மையத்தில் குங்குமத் துளி.

படுக்கை விரிப்பை மடித்துத் தலையணை மீது போட்டாள். விரலைச் சுவருக்கு நீட்டி னாள். நீல விளக்கு அணைந்தது. புகை போன்ற அதிகாலை இருட்டு அறைக்குள் மிச்சம் இருந்தது.

ஜன்னலருகே சென்றாள். திரையை விலக் கிப் பார்த்தாள். ஆடி மாதத்துக் காலைப் பொழுது தெளிவாகவும் சுறுசுறுப்பாகவும் விடிந்துகொண்டிருந்தது. தொலைவில் செவிலியர் விடுதியில் சதுரசதுர மாக வெளிச்சங்கள் தெரிந்தன. அடிவானத்தில் தொங்கிய கரிய மேகங்கள் கன்னம் சிவந்திருந்தன. மழைக்காலம் ஆட்சிக்கு வரப் போவதைத் தெளிவாகப் புரிந்துகொண்ட காற்றுக் காலம் மரங்களின் உச்சந்தலையைப் பிடித்து ஆட்டி, அராஜகத் திலும் அதிகார துஷ்பிரயோகத்திலும் ஈடு பட்டிருந்தது.

'விஸ் விஸ்' என்று முகத்தில் மோதிய குளிர்ந்த விடிகாலைக் காற்று பத்மாவுக்குப் புத்துணர்வூட்டியது. அவள் இதயம் பருவக் கவிதைகளால் கனத்தது. அவள் விழிகள் அளவற்ற மகிழ்ச்சியால் சோகம் காட்டின.

ஒரு மாத ஓய்வுக்குப் பிறகு இன்று முதல் மறுபடியும் மருத்துவப் படிப்புத் தொடரப் போகிறது. ஆட்டம் முடிந்த கிரிக்கெட் ஸ்டேடியம் போல் அமைதியாகக் கிடந்த கேம்பஸ் இன்று மறுபடியும் களை கட்டப் போகிறது. இனிமேல்தான் நிஜமாகவே நான் மருத்துவ மாணவி. பாவம் அன்பு ராஜ். அவன் மட்டும் மாட்டிக்கொண்டான். ஹேமாவிடம் நெருங்கிப் பழகியது பெரிய குற்றமா? ரசாயனப் பேராசிரியை இப் படிப் பழி தீர்த்திருக்க வேண்டாம். அரசிய லில் இருக்க வேண்டியவர்கள் அந்த அம்மை யார். இயரியில் அன்புராஜ் கொள்ளையாக



மதிப்பெண்கள் பெற்றிருந்தும் ஒரவில் ஜைஃபர் போட்டுப் பழைய வகுப்பிலேயே இன்னெரு ஆண்டு உட்காரும்படி செய்து விட்டனர்.

ஹவுஸ்கீப்பர் அன்றைய ஆங்கிலப் பத்திரிகையை அறைக்குள்ளே எறிந்து விட்டுப் போனுன். டெய்சிக்குப் பத்திரிகையும் பெட் காப்பியும் அன்ருடம் தேவைப்படும் அத்தியாவசியப் பண்டங்கள். பத்திரிகையை எடுத்து டெய்சியின் கட்டிலின் மீது போட்டாள். 'பெண்கள் ஒருபோதும்நம்பிக்கைக்கு உகர்ந்தவர்களல்லர். சுதந்திரா கட்சி மட்டுமே மக்களுக்குச் சந்தோஷத்தைத் தர முடியும்' — குஜராத்தில் பிலுமோடி அறை கூவல்.

டெய்சி புதிய நுரை மெத்தையின் சொகுசுக்குள் அமிழ்ந்திருந்தாள். விருது நகரிலிருந்து பேருந்தில் வந்த களைப்பு அவளிடமிருந்தது. குறட்டைகளாகச் சிறுகச் சிறுகக் கழன்று வெளியேறிக் கொண்டிருந்தன. குறைந்ததுஇன்னும் ஒரு மணி நேரமாவது தூங்குவாள். தூங்கட்டும். இப்போது அவளை எழுப்பி எதற்காகத் தொந்தரவு செய்ய வேண்டும்?

இந்த மின் விசிறியும் கடிகாரமும், புதிய பிளாஸ்டிக் வாளியும் அவளுடையஅப்பாவாங்கிக் கொடுத்தனுப்பியிருக்கிருர்.

இதையெல்லாம் சிற்றப் பாவிடம் நான் கேட்டால், 'வேலே ஏதாச்சும் கிடைச்சால் பாரு. படிச்சது போதும்' என்பார்.

இரவு உடையைக் களைந்து விட்டுச் சின்னச் சின்னக் கட்டங்கள் நிறைந்த மரப் பட்டை நிறக் கைத்தறிப் புடவைக்குள் பிரவேசித்தாள். வராந்தாவில் பேச்சுக் குரல் கேட்டு மறுபடியும் ஜன்னலுக்கு ஓடினாள்.

''உனக்கு இன்னிக்கு என்ன டியூட்டி?''

''வார்டு.''

''வார்டு மட்டும்தானா! யூ ஆர் லக்கியார்.''

''உனக்கு?''

''இன்னிக்கு எங்க யூனிட் அட்மிஷன் டே. தியேட்டர் வேறே இருக்கு. மூணாயிடும். மத்தியானச் சாப்பாடு அம்போதான்.''

பேசிக்கொண்டே மோகினியும் சந்திராவும் சோப்பு — ஷாம்பூ — டவலுடன் குளியலறையைக் கைப்பற்றுவதற்காக வராந்தாவில் விரைந்தனர்.

நானும் இவர்களைப் போல் அடுத்த சில ஆண்டுகளில் ஃபார்மகாலஜியையும், பெதாலஜியையும், சர்ஜரி, மெடிஸனோடு கசடறக் கற்ற பிறகு, ஹவுஸ் ஸர்ஜனாவேன். குளியலறையிலும் மெஸ்ஸிலும் அதிகாரத்துடன் இடம் பிடிக்க இப்படி விடியற்காலையிலேயே விழுந்தடித்துக் கொண்டு ஓடுவேன். இப்போது எனக்கும் டெய்சிக்கும் அவசரம் ஒன்றுமில்லே. நிதானமாகக் கல்லூரிக்குப் புறப்பட்டுச் செல்லலாம்.

இன்று இரண்டாவது ஆண்டின் முதல் நாள். முதல் ஆண்டில் தேர்ச்சி பெற்ற தொண்ணூறு பேரும் இன்று மறுபடியும் கல்லூரிக்குள் கொத்துக் கொத்தாக நுழையப் போகிறோம். ஏதோ ஒரு வகுப்பில் உற்சாக ஆரவாரத்துடன் ஒன்றுசேரப் போகிறோம். சிநேகங்களைப் புதுப்பித்துக் கொள்ளப் போகிறோம்.

சாரதா கூடைப் பந்து போலக் கூந்தலில் பூச்சுமந்து வருவாள். பொட்டு நகைகூட இல்லாமல், காது கழுத்தைக் காலியாகவைத்துக்கொண்டு, வலது கையில் மட்டும் ஒரு எச்.எம்.டி. கைக்கடிகாரத்துடன் மரகத மீனாட்சி வருவாள். மாடிப் படியில் மறைவாக யாருக்கும் தெரியாமல் அமர்ந்து டிபன் பாக்சை முகத்துக்குப் பக்கத்தில் ஏந்திக் கொண்டு மேஜைக் கரண்டியால் மளமளவென்று நண்பகல் பசியைத் தீர்த்துக்கொள்ளும் நிர்மலாதேவி இன்னொரு சுற்று விரிந்திருக்கலாம். ஹைதராஜன் ஸல்பைடுக்கு நல்ல பெயர் வாங்கிக்கொடுத்து விடும், உபைதுல்லா பரப்பி வரும் செண்ட் நெடி. மாமல்லன், கருப்பு கருணாகரன், ஆல மர விழுதுக்குக் கீழே கான்க்ரீட் பெஞ்சில் தனியாகப் படிக்கும் சிவப்பு கருணாகரன், காஷ்மீரின் ஸதீஷ் சந்தர் ஆனந்த்... 'வெண்டைக்காய் சாப்பிடறவன் வெஜிடேரியன், நண்டு சாப்பிடறவன் நான் வெஜிடேரியன், மனுஷனைச் சாப்பிடறவன் ஹியூமானிடேரியன்' போன்ற கழுத்தறுப்பு ஜோக்குகளைச் சரமாரியாக உதிர்க்கும் மோரீஷியஸைச் சேர்ந்த கப்பையா பிள்ளை, எல்லாரையும் விட, எல்லா வகையிலும் சிறந்த அல்லது சிறந்தவனாக எனக்குத் தோன்றும் ராம்குமார்!

'ராம்குமார்!' அந்தப் பெயர் ஏனோ என் உள்ளத்தைத் துள்ள வைக்கிறது. கோடி மலர்களின் நறுமணங்களை என்னிடம் அழைத்து வருகிறது. அவன் ஓர் அற்புதக் கனவு. அவனோடு சம்பந்தப்பட்ட எல்லாமே அற்புதமானவை. அமாவாசை நள்ளிரவின் இருளைப் பிசிறில்லாமல் நீக்கும் வல்லமை அவன் முகத்துக்கு இருக்கிறது. என்னிடம் சில சந்தர்ப்பங்களில் அக்கறை காட்டியிருக்கிறான்.

ராம்குமாரின் முகத்தை, அவனுடைய குரலை, அவனுடைய வார்த்தைகளை, அவனுடைய மிருதுவான, பளீரென்ற சிரிப்புக்களை என்னையறியாமல் என் இருதயத்தின் மயோகார்டிய தசைச் சுவரில் இடைவெளியில்லாமல்,செதுக்கிக்கொண்டு வருகிறேனே, அது ஏன்?

டெய்சியின் குறட்டை சற்று தணிந்திருந்தது. இவளை நான் முதன் முறையாகச் சந்தித்தது கல்லூரியின் அலுவலகத்தில். கட்டணம் செலுத்துவதற்காக வராந்தாவில் நீண்டிருந்த வரிசையில் எனக்கு முன்னால் நின்றாள். அவள் என்னுடைய 'ரூம்மேட்' ஆக வருவாள் என்று அப்போது நான் எதிர்பார்க்கவில்லே. அவளுடைய அதிகப்படியான நகையலங்காரம் அவள் வெளியூரைச் சேர்ந்தவள் என்று தெரிவித்தது. என்னோடு பேசுவாள் என்று எதிர்பார்த்தேன். பேசவில்லே.

பணத்தைக் கட்டிவிட்டுத் தனியாகப் படியிறங்கி நடந்தாள். நான் பின்னால் நடந்தேன். பாக்டீரியாலஜி ஹால்நெருங்கிய போது ராகிங் பசியோடு காத்து நின்ற ஏழெட்டு சீனியர் மாணவர்களுக்கிடையே மாட்டிக் கொண்டாள்.

''உம் பேரென்ன?''

பஸ் ஸ்டாப்புகளில் பஸ் ரூட்டைக் குறிப்பிடும் எண்கள் மீதும், தெருப் பெயரைத் தெரிவிக்கும் கான்கிரீட் அம்பு மீதும் நோட்டீஸ் ஒட்டி விளம்பரம் செய்வதை ஒரு தீவிர நடவடிக்கை மூலம் தடைசெய்வது அவசியம். — அவசரம். கலைஞர் கருணாநிதி நகரின் குடியிருப்புக்களைக் காட்டும் வரைபடம் முழுக்க போஸ்டராகவே நிரப்பப்பட்டிருக்கிறது. இதனால் உள்ளூர்வாசிகளும், வெளியூர்வாசிகளும் முகவரிகளைத் தேட முடியாமல் சிரமத்துக்குள்ளாகின்றனர்.

—செந்தில்நாதன்



பேனுவின் மூடியையோ, கழுத்துப் பகுதியையோ கழற்றுவதற்குக் கடினமாயிருந்தால், ரப்பர் பேண்ட் ஒன்றை எடுத்து அதன் மீது நன்கு இறுக்கமாகச் சுற்றி, பின்பு கழற்றினுல் மிக எளிதாக இருக்கும். —எம். ராஜேந்திரன்



''டெய்ஸி ரேச்சல் பிரியராணி.''

''பேபி என்னம்மா கூட்ஸ் வண்டி மாதிரி வருது.''

''டேய்சி! டோன்ட் டிரைவ் மீ க்ரேசி'' என்று ஒருவன் கத்தினுன். ''ஹா'' என்ற சிரிப்பு.

''பிரியராணி வி வாண்ட் பிரியாணி'' என்ருன் இன்னெருவன். மறுபடியும் சிரிப்பு.

''ஏதாச்சும் ஒரு பேரை மட்டும் வெச் சுக்கிட்டுப் பாக்கியைக் கழட்டி வுட்டிரு. இவ்வளவு நீளம் எம்.பி.பி. எஸ்.ஸுக்கு ஒத் துக்காது. போகட்டும், எந்த ஊரு உனக்கு?'' ஒருவன் அன்பாகக் கேட்டான்.

''விருதுநகர்.''

''எந்தக் காலேஜ்ல படிச்சே?''

''திருச்சி சீதாலட்சுமில.''

''அப்பா என்ன பண்ருர்?''

''மிளகா பிஸினஸ்.''

''மார்க் எவ்வளவு எடுத்தே?''

''டிஸ்டிங்ஷன்.''

''எந்த சப்ஜெக்ட்ல? எவன் உனக்கு ஸீட் குடுத்தான்?''

''யாரைப் புடிச்சும்மா வந்தே?''

''அதெல்லாம் வேண்டாம்டா. யாருக் குப் பணம் குடுத்தே?''

''வாட் ஃபார்?'' டெய்சி சற்று ஆத் திரத்துடன் கேட்டாள்.

''இங்கிலீஷ் என்ன வேண்டிக் கிடக்கு இங்கிலீஷ்? தமிழ்லதான கேட்டேன். தமிழி லேயே பதில் சொல்லு.''

''எதுக்குப் பணம், யாருக்குப் பணம்?''

''இன்னும்மா தெரியாத மாதிரி புச்சாக் கேக்கறே? உனக்கு மெடிகல் ஸீட் வாங்கற துக்குத்தான். எம்எல்ஏக்குக் குடுத்தியா, மந்திரிக்குக் குடுத்தியா?''

''யாருக்குமில்லே.''

''இங்க பார், உண்மையைச் சொல்லலே இங்கேர்ந்து நீ போக முடியாது.''

டெய்சியின் கண்கள் கலங்கிவிட்டன. பரிதாபமாக அவர்களைப் பார்த்தாள். 'நான் டாக்டராகப் போறேன்' என்று ஊரில் எல்லாரிடமும் சில தினங்களுக்கு முன் பெருமை அடித்தது அவள் நினைவுக்கு வந்தது.

''எங்க மாமா கிட்ட.'' டெய்சி தயங் கினுள்.

''அப்டி வா...ம்....''

''...எங்க அப்பா இருபதாயிரம் குடுத் தாரு.''

''அப்பமன்னு உன்னோட மாமா பேர் என்ன? விவரத்தை இதுல எழுதிக் குடு'' என்று கனமான மீசை வளர்த்திருந்த மாணவன் ஒரு நோட்டை விரித்து அவ ளிடம் நீட்டினுன்.

''எதுக்கு?''டெய்சி கேட்டாள்.நோட்டை வாங்கப் பயந்தாள்.

''கோர்ட்ல போட்டு உனக்குக் குடுத்த ஸீட்டைப் புடுங்கிடுவோம்.''

சிரித்தார்கள். அப்போது பத்மாவின் கரம் நீண்டு அந்த நோட்டைப் பறித்தது. எல்லாரும் டெய்சியை விட்டு விட்டு பத்மா வையே பார்த்தார்கள். அவள், ''என்ன எழுதணும், நான் எழுதிக் குடுக்கிறேன்'' என்ருள்.

''அப்பமன்னு நீயும் அதே கேஸ்தானு? உங்கப்பா யாரு?''

''உங்களுக்குத் தெரிஞ்சவர்தான்.''

''அ!''

''அஸிஸ்டென்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ்'' அமைதியாகத் தெரிவித்தாள். நட்பு பொங்கும் விழிகளால் எல்லோரையும் பார்த்தாள்.

நோட்டைக் கொடுத்தவன் மனத்தில் மூண்ட கலவரத்தைச் சிரமத்துடன் சமா ளித்து மறைத்துக்கொண்டு, ''அது வந்து மேடம் நீங்க இங்கே படிக்க வந்திருக்கீங்க இல்லேயா? நாங்க இங்கே ஏற்கனவே படிச் சிக்கிட்டிருக்கோம் இல்லேயா?'' என்று இழுத் தான்.

''சொல்லுங்க'' என்ருள் பத்மா அலட் சியமாக.

''நீங்களும் நாங்களும் குறைஞ்சது இன் னும் நாலஞ்சு வருஷத்துக்காவது டெய்லி ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்க்கணும். அதாவது.....''

''அதாவது ஃபிரெண்ட்லியா பழகணும் இல்லேயா?'' என்று இன்னெரு மாணவன் தொடர்ந்தான். ''சீக்கிரமா ஒருத்தரோடு ஒருத்தர் பழகறதுக்காகத்தான் இந்த மாதிரி ராகிங். இதை யெல்லாம் ஸீரியஸா எடுத் துக்கக் கூடாது. ஒக்கேய்? போயிட்டு வாங்க. நல்லபடியா படிங்க. ஆல் தி பெஸ்ட்.''

டெய்சி பஸ் ஸ்டாப்பில் பத்மாவுக்கு நன்றி தெரிவித்தாள்.

''என்னோட சித்தப்பா லாட்டரி ஏஜண்ட் என்கிற உண்மையை அவுங்ககிட்டச் சொல்லி யிருந்தா என்ன ஆகிறது?'' என்ருள் பத்மா.

''அப்பமன்னு உங்கப்பா போலீஸ் கமி ஷனர் இல்லேயா?'' டெய்சி ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''எனக்கு அப்பாவே கிடையாது'' என்று சொல்லிவிட்டுப் பத்மா பெருமூச்சு விட்டாள்.

இப்போது ஒரு வருடமாகி மாணவர்கள் எல்லாருக்கும் ஒரு வயது கூடிவிட்டது. இப் போது எல்லாரும் நண்பர்களாகி விட்டோம்.

''டெய்ஸீ டெய்ஸீ... எழுந்திருடி, மெட் ராஸ் வந்திருச்சு. பஸ்ஸை விட்டு இறங்கு'' என்று படுக்கையில் கிடந்தவளின் தோளைப் பத்மா உலுக்கி எழுப்பினுள். வாழ்க்கையின் மாபெரும் திருப்புமுனையை ஏற்படுத்தும் சம்பவம் ஒன்று அன்று பகலில் நிகழப் போகிறது என்பது அப்போதெல்லாம் பத்மா வுக்குத் தெரியாது.

(தொடரும்)

பொட்டல்புதூர்...ஜக்தியால்...அடிமாலி...மத்தூர்

# மக்களின் ஆரோக்கியம், ஆனந்தம் மற்றும் வளமையில் அக்கறை கொண்டவர் யார் தெரியுமா?

# சதர்ன் ரோட்வேஸ்

பொட்டல்புதூர்—தமிழ் நாட்டின் தென் கோடியில் உள்ள ஒரு குக்கிராமம்.

ஜக்தியால்—ஆந்திரப்பிரதேசத்தின் வடகோடியில் உள்ளது.

அடிமாலி—ஒரு பெரிய நகரத்திலிருந்து 29 கி. மீட்டர் தூரத்திலுள்ள ஒரு கேரளக் கிராமம்.

மத்தூர்—கர்நாடகாவின் மாண்டியா மாவட்டத்தைச் சேர்ந்த சிறியதோர் ஊர்.

இங்கு வாழும் மக்களுக்கெல்லாம் பொதுவான ஒரு நண்பன் உண்டு. ஆம், அதுதான் சதர்ன் ரோட்வேஸ்.

தேவைப்பட்ட போது உதவக் காத்திருக்கும் நண்பன். அவசியமான மருந்துகள் துரிதமாகத் தேவைப்பட்ட போது கொண்டு வந்து சேர்க்கும் நண்பன்.

பண்டிகை போன்ற மகிழ்ச்சிகரமான நேரங்களில் உங்களுக்காக உலவுப் பொருட்கள் மற்றும் துணி மணிகளை எடுத்துவந்து இனிய முகத்துடன் பங்கு கொள்ளும் நண்பன்.

விலையுயர்ந்த பார்சல்களை எடுத்துச் சென்று வாழ்க்கைச் சக்கரம் தங்கு தடையின்றிச் சுழல, பொருளாதாரம் சிறந்து விளங்க, சிறிய ஊசி முதல் மிகப் பெரியத்தூண்கள் வரை, வாணிபம் மற்றும் தொழிலகங்களுக்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் கொண்டு சேர்த்திடும் இனிய நண்பன்.

இந்நண்பன்தான் சதர்ன் ரோட்வேஸ். இன்று தென்னிந்தியாவில் தமக்கெனச் சொந்தமாக 376 லாரிகளை வைத்திருக்கும் முதன்மையான நிறுவனம். இதன் வண்டிகள் தினமும் 68,000 கி.மீட்டர்கள் பாதையில் 76,000 கி.மீட்டர்கள் தென்னகமெங்கும் ஓடி 581 இடங்களை அடைகின்றன.

## டிவிஎஸ் வழியில் திரம்மிக்க ஓட்டம்!

சதர்ன் ரோட்வேஸின் சீரிய வளர்ச்சிக்கு முக்கியக் காரணம் எந்த ஒரு டிவிஎஸ் நிறுவனத்திலும் இயற்கையாகக் காணப்படும் சுறுசுறுப்பு மற்றும் புதுமை உணர்வுகளேயாகும்.

குறிப்பிட்ட நேரப்படி வண்டிகள் செல்வதற்கான கட்டுப்பாட்டிற்கு ஏற்ப கிளைகளுடன் டெலக்ஸ் மற்றும் கம்ப்யூட்டர் தொடர்பு வசதி.

இத்துடன், தொடர்ச்சியான பல பாதுகாப்புச் சோதனைகள் கிளம்பும் இடத்திலும், சேரும் இடத்திலும் ஸ்டேஷன் மானேஜர்களால் செய்யப்படுகின்றன.

இவ்வளவுதானு? இல்லை. வண்டி, முழுவதும் நிரம்பி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, சரியான நேரத்தில் கிளம்பிவிடும்.

இவைகளுக்குமேல் ஏதேனும் தவறு நேர்ந்து விட்டால் நஷ்டஈடுகள் துரிதமாகக் கொடுக்கப் பட்டுவிடுகின்றன.

சுருங்கச்சொன்னல், சதர்ன் ரோட்வேஸின் ஒவ்வொருச் செயலும் நம்பகத்தன்மை மற்றும் சீரிய சேவைக்கு உறுதி அளிக்கின்றது. இவையனைத்திற்கும் பின்னணியில் இருப்பது சதர்ன் ரோட்வேஸின் தீவிரப் பயிற்சி பெற்ற, விசுவாசமிக்க 2088 ஊழியர்களின் பக்க பலம். இவர்கள், வருடம் முழுவதும் உங்களின் மகிழ்ச்சி, ஆரோக்கியம் இவற்றிற்காக இதய பூர்வமாகப் பணி புரியக் காத்திருக்கின்றனர்.




## சாலையில் இதைவிடச் சிறந்ததோர் மார்க்கமில்லை




**சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்**, மதுரை

கிளைகள்: சென்னை, பெங்களூர், கோயம்புத்தூர், சேலம், திருச்சி, திருநெல்வேலி, விஜயவாடா, செகந்திராபாத், அனந்தப்பூர், பாண்டிச்சேரி.

SAA/SRL/3359



# புயலோடு ஒரு போராட்டம்

சுப்ரபாலன்

கல்லூரி வகுப்பறையில் பாடம் நடந்து கொண்டிருக்கிறது. மனசுக்கு மிகவும் பிடித்த பாடம். அப்படியே வகுப்பறை முழுவதும் பாடத்தில் ஒன்றிப் போயிருந்த நேரத்தில் மிலாவுக்கு வயிற்றில் சுருக்கென்று வேதனை தெளிகிறது. சின்ன வலிதானே என்று பொறுத்துப் பார்க்கிறாள். ஓரளவு சமாளித்துக்கொள்ளவும் முடிகிறது.

ஆனால், வீட்டுக்குப் போயும் வலி விடவில்லை. ஏதோ மாத்திரைகளை வாங்கிச் சாப்பிட்டுக் கொஞ்சம் ஆறுதலடைகிறாள்.

இது அப்புறம் அடிக்கடி நிகழ்கிறது. உள்ளூர் டாக்டர்களிடம் காட்டுகிறாள். ஏதோ சாதாரணமான வயிற்றுக் கோளாறு என்றே வைத்தியம் செய்கிறார்கள்.

ஒரு நாள் – கல்லூரி ஆய்வுக் கூடத்தில் மிலா சோதனை செய்து கொண்டிருந்த போது வயிற்று வலியால் துடி துடிக்கிறாள். அப்படியே நினைவிழந்தும் விடுகிறாள். இப்படி அவ்வப்போது நேர்வதால் பாடங்களைச் சரிவரக் கவனிக்க முடியாமலும் போகிறது.

ஆனால், மிலா இதற்கெல்லாம் சளைப்பவளாக இல்லை. அன்றன்று கவனிக்க முடியாமல் விட்டுப் போகிற பாடங்களைத் தோழிகளிடம் கேட்டுச் சமாளித்துக் கொள்கிறாள். இரண்டு ஆண்டுகள் இப்படியே வலியும், வேதனையும் படிப்பும் தொடர்கிறது.

எம். எஸ்ஸி. படிப்பை முடிக்கிற நேரம் அது. முதல் தடவையாக மிலாவின் வயிற்றில் சர்ஜரி செய்து கட்டி ஒன்றை அகற்றுகிறார்கள். கட்டியையும் சோதனைக்காக வேலூர் மருத்துவ மனைக்கு அனுப்புகிறார்கள். சோதனை முடிவு அதிர்ச்சியைத் தருகிறது. மிலாவுக்குள் புற்றுநோய் முற்றிய நிலையில் இருப்பது தெரிகிறது.

அவளுக்கு அடிக்கடி வயிற்றில் வலி ஏற்பட்டது புற்றுநோயின் தொடக்கம் என்பதை உரிய நேரத்தில் உணரத் தவறிவிட்டார்கள். இப்போது என்ன செய்வது?

உடனடியாக, மிலாவைச் சென்னையிலுள்ள புற்றுநோய் ஆராய்ச்சி நிறுவனத்துக்கு அனுப்புகிறார்கள். இன்னும் இரண்டு மாதத்தில் மிலா எம். எஸ்ஸி. தேர்வு எழுதியாக வேண்டும்.. மறுபடியும் ஒரு சர்ஜரி செய்து பார்க்க வேண்டும் என்று சென்னை டாக்டர்கள் விரும்புகிறார்கள்.

மிலாவுக்குப் படிப்புத்தான் முக்கியம். எம். எஸ்ஸி. இறுதித் தேர்வை முடித்து விட்டு வரும்வரை அவகாசம் கேட்கிறாள். டாக்டர்களும் சம்மதிக்கிறார்கள். தேர்வை எல்லாம் எழுதி முடித்து விட்டுச் சொன்னபடி மீண்டும் சென்னை வருகிறாள் மிலா. சர்ஜரிக்கு அவளைத் தயார்ப்படுத்துகிற நேரத்தில் மீண்டும் ஒரு தடங்கல்.

ஊரில் மிலாவின் அப்பா திடீரென்று இறந்து போகிறார். தம்முடைய செல்வப் பெண்ணுக்கு இப்படி ஒரு நோய் வந்ததே என்கிற வேதனை காரணமாகக் கூட அவர் அதிர்ச்சியடைந்திருக்கலாம்.

ஒரு மாதம் தாமதித்து சர்ஜரி நடக்கிறது. நோயின் தன்மை நிச்சயமாகிறது. புற்று நோய்க்கான பிரத்தியேக மருந்துகள் உடனே தரப்படுகின்றன. வி. வி. ஓ. பி. என்கிற கலவை மருந்து முறை. ஆறு




**புற்று நோயை எதிர்த்துப் போராடி, வாழ்க்கை பிரச்னைகளையும் வெற்றிகரமாய்ச் சமாளித்து முன்னேறி வருகிற ஒருவரைப் பற்றிய அனுபவங்கள் மற்றவர்களுக்கு நம்பிக்கையூட்டுவதற்காகத் தரப்படுகின்றன. பெயர்கள் கற்பனை.**

வாரத்துக்கு ஒரு தடவை என்கிற கணக்கில் ஆறு தவணைகளில் மருந்து தரப்படுகிறது. மிலாவின் உடல்நிலை ஓரளவு சீராகிறது. மருந்தின் பக்க விளைவுகளும் அதிகமில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

சீக்கிரமே மிலாவுக்கு இனிப்பான செய்தி வருகிறது. அவள் எம். எஸ்ஸி. தேர்வில் தேர்ச்சி பெற்று விட்டாள். அடுத்து என்ன செய்வது? உடல்நிலையும் சாதாரணமாக ஆகிவிடவே, டாக்டரேட் படிப்புக்காகப் பல்கலைக் கழகத்தில் பதிவு செய்து கொள்கிறாள் மிலா.

அடுத்த ஆண்டில் இரண்டாம் சோதனையாக மிலாவுக்கு மறுபடியும் ஒரு சர்ஜரி செய்யப் படுகிறது. டாக்டர்களுக்கு ஒரே வியப்பு. மிலாவுக்குப் புற்று நோய் இருந்தது என்பதற்கான சுவடே இல்லை. நோய் எதிர்ப்பு மருந்துகள் வெகு அற்புதமாய் வேலை செய்துள்ளது அனைவருக்கும் பெரு மகிழ்ச்சி தருகிறது. மருத்துவ மனையின் சாதாரண ஊழியர்கள் முதல் டாக்டர்கள் வரை யார் யாரெல்லாமோ வந்து மிலாவுக்கு வாழ்த்துத் தெரிவிக்கிறார்கள்.

மிலாவின் பத்தொன்பதாவது வயதில் வாலாட்டிய நோய் மூன்று ஆண்டுகளில் ஏறக்குறைய துரத்தி யடிக்கப்பட்டுவிட்டது. இந்த வெற்றிக்குக் காரணம் சக்தி வாய்ந்த மருந்துகளா, இல்லை நோயாளியின் மனோ திடமா என்று டாக்டர்களே வியக்கின்ற ஓர் அனுபவம் இது.

இனி—

மிலாவின் டாக்டரேட் படிப்பு தொடர்கிறது. கூடவே அவளுடைய சக மாணவரான ப்ரியாவுடன் பழக்கமும் ஏற்படுகிறது. அடுத்த ஆண்டில் சாதாரணமான பழக்கம் காதலாகப் பரிணமிக்கிறது. ஒருவரை மற்றவர் நன்றாகப் புரிந்து கொள்கிறார்கள். திருமணம் செய்து கொள்வது என்றும் தீர்மானம் செய்து கொள்கிறார்கள். இருவரும் சேர்ந்தே போய்த் தங்கள் டாக்டரைச் சந்திக்கிறார்கள்.

''டாக்டர்! நாங்கள் திருமணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டோம். இது பற்றித் தங்களிடம் ஆலோசனை பெறவே வந்திருக்கிறோம்'' என்று அவர்கள் சொன்னவுடன் டாக்டர் சற்றுச் சிந்தனை செய்கிறார்.

''ஆல் ரைட்! தாராளமாகச் செய்துகொள்ளுங்கள். ஆனால் ஒரு நிபந்தனை. மிலாவின் நோய் பூரணமாகக் குணமாகி ஐந்து ஆண்டுகளுக்காவது அவளுக்கு ஓய்வு வேண்டும். ஆமாம், குழந்தை பெற்றுக் கொள்ளக் கூடாது.''

இது ஒன்றும் அவ்வளவு பெரிய நிபந்தனையாக அவர்களுக்கு அப்போது தோன்றவில்லை. ஆரவாரம் ஏதும் இல்லாமல், சீர்திருத்த முறையில் திருமணமும் செய்து கொள்கிறார்கள்.

இந்த இடத்தில் மிகவும் முக்கியமான விஷயம் ஒன்றைச் சொல்லி யாக வேண்டும். மிலாவின் கணவன் ப்ரியா முற்போக்கான சிந்தனை உடையவர். தன்னை ஒரு நாத்திக வாதி என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுகிறவர். அறிவியல் படிப்பு, அது

தொடர்பான ஆராய்ச்சிகள் என்று ஈடுபாடு கொண்ட ப்ரியாவுடன் பழகத் தொடங்கிய பின்னர் மிலாவும் நாத்திகவாதியாக மாறி விட்டாள்.

வெறும் பிரார்த்தனைகளால் எவ்வித பயனும் இல்லை. பிரச்னைகளை விஞ்ஞான பூர்வமாகவே அணுக வேண்டும் என்பதில் கணவன் — மனைவி இருவரும் ஒத்த கருத்துடையவர்கள். மிலா புற்று நோய் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றபோது பலருடைய வேதனைகளைக் கவனித்ததுண்டு.

''மூவாயிரம் ரூபாய் கொடு. முழுமையாக நோயைக் குணப்படுத்துகிறோம்'' என்று வருகிற மோசமான பத்திரிகை விளம்பரங்களும், இந்தச் சாமியாரிடம் போனால் நோய் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடும் என்று சொல்லிச் சலனப்படுத்துகிற பாமரத்தனங்களும் அவளைச் சிந்திக்க வைத்ததுண்டு.

''அப்பாவிகளான மக்களைப் போய் மோசடிப் பேர்வழிகள் ஏமாற்றுகிறார்களே... சினிமாக்கள், பத்திரிகைக் கதைகள் எல்லாவற்றிலும் புற்றுநோய் என்றால் தீர்ந்தது எல்லாம் என்பது மாதிரி மிரட்டித் தன்னம்பிக்கையைக் குழி தோண்டிப் புதைத்து விடுகிறார்களே'' என்று அங்கலாய்ப்பாள்.

மூன்று ஆண்டுகள் பதுங்கியிருந்த புலி மிலாவுக்குத் திருமணமாகி மூன்று மாதங்களில் பாயத்தயாரானது. இதையும் அவர்கள் உடனே உணர முடியவில்லை.

அவளுக்குத் திடீர் திடீரென்று காய்ச்சல் வரும். 101, 103 டிகிரி என்று மாறி மாறி ஜுரம் அடிக்கும். பக்கத்தில் இருந்த டாக்டரிடம் காண்பித்துக் குணம் ஏதும் தெரியாத நிலையில் மறுபடியும் கான்ஸர் இன்ஸ்டிடியூட்டுக்கே போனார்கள். அங்கேயும் இரண்டு மூன்று முறை காய்ச்சலுக்காகக் கவனித்தார்கள். டைபாய்டு போல இருக்கும் என்றெண்ணி மருந்துகள் தரப்பட்டன. ஏப்ரல் முதல் ஜூன்வரை விட்டு விட்டு இந்தக் கவனிப்பு இருந்தது.

மூன்றாவது தடவை மிலா நோய்வாய்ப்பட்டபோதுதான் அவளுக்கு நடக்க முடியாத நிலை ஏற்பட்டது. விந்தி விந்தி அவள் நடப்பதை அப்போதுதான் கவனித்தார்கள்.

மிலாவுக்கு இடுப்பெலும்புப் பகுதியில் வலி ஏற்பட்டது. மீண்டும் எக்ஸ்ரே படங்கள் எடுத்துப் பார்த்தார்கள். புயல் இப்போது புதிய இடத்தில் மையம் கொண்டிருப்பது தெரிந்தது. மறுபடியும் மருந்துகள், மூன்று முறை தரப்பட்டும் பயன் தெரியவில்லை. இடுப்பு வலியும் குறையக் காணோம்.

புற்றுநோய் மருத்துவமனையில் தொடர்ந்து சிகிச்சை பெறுகிறாள். மிலா. ஆறு ஓரம் அதன் டாக்டர்களின் ஒப்புதலுடன் வேறு எங்காவது 'செகண்ட் ஒபினியன்' கேட்கலாமா என்று யோசிக்கிறார்கள். டாக்டர் ஒப்புதல் தருவதுடன், மிலாவின் கேஸ் ஹிஸ்டரி முழுவதையும் எழுதியே தருகிறார்.

பம்பாய் செல்கிறார்கள். புற்றுநோய் மருத்துவத்தில் மிகவும் முன்னோடியானவர் என்று கருதப்படுகிற ஒரு டாக்டரிடம் மிலாவின் கேஸ் ஹிஸ்டரி தரப்படுகிறது. சென்னை டாக்டரின் அறிக்கை, சர்ஜரியில் எடுத்த உறுப்பின் மாதிரி ஸ்லைடுகள், தவிர, முதல் சர்ஜரியின்போது வேலூர் மருத்துவமனைக்கு அனுப்பப்பட்ட கட்டியின் செதுக்குத் துண்டு இவற்றையும் வாங்கிப் பார்க்கிறார் அவர்.

தம்முடைய பரிசோதனையை முடித்த அந்த டாக்டர் சொல்கிறார்: ''இன்னும் ஆறு மாதம்... அதிகம் போனால் ஒரு வருடம் தான் இந்த பேஷண்ட் உயிர் வாழக்கூடும்.''

ப்ரியா இதைக் கேட்டதும் அதிர்ந்துவிடவில்லை. மிலாவிடம் இதை அப்படியே சொல்லி விடலாமா என்று டாக்டரையே கேட்கிறார். சொல்லலாம் என்று டாக்டர் சொன்னதும் ப்ரியா தன் மனைவியிடம் உண்மை நிலையைச் சொன்னதும், நண்பர்கள், உறவினர்கள் அனைவரும் விவரம் அறிந்ததும் — யாருமே அதிர்ச்சியுறவில்லை. இயல்பாகச் செய்தியை வாங்கிக் கொள்கிறார்கள்.

நோயின் தன்மை உறுதியானவுடன் பம்பாய் நெரிசலில் அவதியுறுவானேன் என்று சென்னைக்கே திரும்பிச் சிகிச்சையைத் துவக்கினார்கள். மிலாவின் படிப்பும் தொடர்கிறது.

இப்போதும் மிலா ஒழுங்காக வகுப்புகளுக்குப் போக முடியவில்லை. பல்கலைக் கழகத்தில் அட்டன்டன்ஸ் முக்கியம் என்கிறார்கள். மிலா சி.எஸ்.ஐ.ஆர். அமைப்பின் கீழ் பெலோஷிப் பெற்ற மாணவி. எனவே நிலைமையை அவர்களுக்கே எழுதி அட்டன்டன்ஸ் விதியிலிருந்து விலக்குப் பெறுகிறாள்.

கேரள மாநிலம் இடுக்கி மாவட்டத்தைச் சேர்ந்த தமிழ் நேசன் என்ற 24 வயது வாலிபர் தமிழக முதலமைச்சர் எம். ஜி. ராமச்சந்திரனுக்கு வாழ்த்து அனுப்பியிருக்கிறார். அதில் என்ன விசேஷம் என்கிறீர்களா? இருக்கிறது. 157 அடி நீளமும், மூன்றரை அடி அகலமும் உள்ள இந்த வாழ்த்து இதுவரை இந்தியாவிலேயே யாரும் அனுப்பாத அளவு மிக நீ....ண்....ட மடல்.

-ஓ. எஸ். பாலகிருஷ்ணன்



என் கண்ணையே
என்னாலே நம்ப முடியலையே




# புதிய அதிக சக்திவாய்ந்த
# சூபர் 777 டிடர்ஜெண்ட் பார்

## வாக்குறுதி உன்னதத்தன்மைக்கு மட்டுமே அல்ல,
## வாக்குறுதிகூட வாக்குறுதியைக் காப்பாத்தும்.

இப்போது, புதிய சூபர் 777 டிடர்ஜெண்ட் பார் மூலம் எனக்கு அனைத்தையும்விட அதிக வெண்மை சலவை கிடைக்குது. இதோட டிடர்ஜெண்ட் ஃபார்முலா முன்னைவிட அதிக சிறப்பா இருபபதாலே முன்னைவிட அதிக நுரை தருது, அதிக துணிகளை துவைக்குது, அதிக நாட்கள் உழைக்குது. இதனால்தான் மற்றெல்லா டிடர்ஜெண்ட் பார் மற்றும் சோப்புகளைவிட இது சிறந்ததாகும்.

உபயோகப்படுத்திப் பாரீர்...நீங்களே கண்டு கொள்வீர் நயத்தை,
திரும்பத் திரும்ப வாங்குவீர் இதை.

Shilpi DM 2/83 Tam.

ஆராய்ச்சிக் கட்டுரைகளை நகல் செய்வது, திருத்துவது போன்ற செக்ரட்டேரியல் வேலைகளில் எல்லாம் மீலாவின் சக மாணவர்களே உதவுகிறார்கள். சில ஆசிரியர்களும் உதவுகிறார்கள். கடுமையான உழைப்பின் பலனாய் மீலா டாக்டர் பட்டம் பெறுகிறார்.

இவற்றுக்கிடையே இன்னொன்றும் நேர்கிறது. திருமணத்துக்காக டாக்டர்கள் சொன்ன அந்த முக்கியமான நிபந்தனை கவனம் தவறி விடுகிறது. மீலா கருவுற்று விடுகிறாள். மிகவும் சங்கடமான நிலை. மீலாவின் உடல்நிலை சீர்ப்படுவதுதான் முக்யம் என்கிற நிலையில் டாக்டர்கள் அவளுடைய கரு வளர்வது சரியில்லை என்று முடிவெடுக்கிறார்கள். வேறுவழியேதும் இல்லை என்பதால் கருக் கலைப்புச் செய்யப் படுகிறது.

ரேடியேஷன், சக்தி வாய்ந்த மருந்துகள் இவற்றின் விளைவாக ஒரு சமயம் மீலாவின் தலை அப்படியே கொத்தாகக் கொட்டி விடுகிறது. ஒரு பல் கூட விழுந்து விடுகிறது. தாற்காலிகமான பிரச்னைதான். தலைமயிர் பின்னால் தானே வளர்ந்து விடுகிறது.

உடல் நலத்தோடு எவ்வளவோ போராட்டங்கள் இருந்தாலும் மீலாவின் படிப்பு மேலும் தொடர்கிறது. ஏற்கனவே டாக்டர் பட்டம் பெற்றுவிட்ட மீலா இப்போது **Post Doctoral** ஆராய்ச்சிப் பட்டம் பெறப் படித்து வருகிறார். ஆராய்ச்சி மாணவர் என்கிற முறையில் கான்பூர், மைசூர், பெங்களூர், கொச்சின் என்று வெளி மாநிலங்களில் நடைபெறுகிற மாநாடுகள், கருத்தரங்குகள் இவற்றுக்கெல்லாம் போய்க் கலந்து கொள்கிறார் மீலா. ஒரு கட்டத்தில் நடப்பது சிரமமாக ஆனதும் சக்கர நாற்காலி ஒன்றையும் வாங்கிக் கொண்டார். வெளியூர்ப் பயணங்களின்போது மீலாவின் கணவர் உடன் செல்வார். மருமகளைக் குழந்தையாய் நேசித்து அன்பு பாராட்டுகிற மாமியாரும் சில நேரங்களில் துணையாக உடன் செல்வதுண்டு.

''எல்லா வகையிலும் நான் கொடுத்து வைத்தவள்தான்'' என்று மனநிறைவுடன் இருப்பவர் மீலா.

''இந்த நோய் வலிமை மிக்க ஒரு பகைவன்தான். இருந்தும் நான் எதிர்த்துப் போராடுகிறேன். போர்க்களத்தில் எதிரியோடு மோதுகிற மாதிரிதான். என்னுடைய அணியில் டாக்டர்களும், உறவினர்களும், நண்பர்களும், சக்தி மிக்க மருந்துகளும் துணை நிற்கிறார்கள்'' என்கிறார் மீலா.

கொச்சினில் நடைபெற்ற மகாநாட்டுக்குப் போயிருந்தபோது நண்பர்களும், பேராசிரியர்களும் அளவுக்கு அதிகமான பற்றுடனும், பாசத்துடனும் உதவி செய்ததை நினைவுகூர்கிறார். நடக்கச் சிரமப்படுகிறவர் என்பதால் அதிகம் அலைய வேண்டாம் என்பதற்காக இவர் தங்கியிருந்த அறைக்கே நண்பர்களும், பேராசிரியர்களும் கூடச் சாப்பாடு கொண்டு வந்து தந்திருக்கிறார்கள். அந்தப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் அவ்வப்போது மீலாவின் வசதிகளைப் பற்றி விசாரித்துக் கொள்வாராம்.

பம்பாய் மருத்துவர்கள் சொன்ன ஒரு வருடம் என்கிற காலக் கெடு எப்போதோ முடிந்து விட்டது. அதன் பிறகு நான்கு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. இடுப்பெலும்புப் பகுதியில் ஏற்பட்ட நோயின் அறிகுறியும் இப்பொழுது மறைந்து விட்டது போல் ஒரு நிலை. அதன் இடையூறுகள் இப்போது இல்லை. ஆனால் வேறு ஒரு புதிய இடத்தில் நோய் படர்ந்திருப்பதாய்ச் சொல்கிறார்கள்.

புற்றுநோய் என்பது சாதாரணமான ஒன்றில்லைதான். என்றாலும் தளர்ச்சியுறாமல் பரபரப்பு அடையாமல், பத்து ஆண்டுகளாய்ப் போராடுகிறார் மீலா. என்ன செய்யப் போகிறோம் என்று மனம் ஒடிந்து போய்க் கையைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்து விடுகிறவர் இல்லை இவர். மிகவும் வித்தியாசமானவர்.

உன்னால் ஆனதை நீ பார், என்னால் ஆனதை நான் பார்த்துக் கொள்கிறேன் என்று நோயிடம் சவால் விட்டுத் தாக்குப் பிடிக்கிற மனநிலை மீலாவுக்கு இருக்கிறது. இந்தத் தம்பதியின் படிப்பறிவும், பகுத்தறியும் திறனும், கலக்கமடையாத மனவளமும் முக்யமாக அன்புள்ளமும் எல்லோருக்கும் அமைய முடியுமானால்—

இந்தப் பூமியில் ஒரு சுவர்க்கத்தையே கூட உருவாக்கிக் காட்டி விடலாம்.

**(அடுத்தவாரம்: புற்றுநோய் பற்றிய சில மருத்துவ ரீதியான சுவாரஸ்யமான விவரங்கள்)**

சென்னையிலிருந்து பம்பாய்க்குத்தாதர் எக்ஸ்பிரசில் பயணப்பட்டபோது பார்த்தது: ஆந்திர மாநிலத்தில் ஒரு ஸ்டேஷனில் வண்டி நின்றபோது சுமார் பத்து வயது மதிக்கத்தக்க ஒரு சிறுவன் ஏறினான். கையில் வைத்திருந்த ஒரு கந்தல் துணியால் கீழே இறைந்து கிடந்த சிகரெட் துண்டுகளையும் குப்பைகளையும் பெருக்கிச் சுத்தம்செய்துவிட்டு, ஒவ்வொருவரிடமும் கையேந்தினான். சிலர் தந்த ஐந்து, பத்து பைசா நாணயங்களைப் பெற்றுக் கொண்டு அடுத்த கம்பார்ட்மெண்டுக்குச் சென்றான். எப்படியாவது உழைத்துத்தான் சம்பாதிக்க வேண்டும் என்ற அந்தச் சிறுவனின் எண்ணத்தைப் பாராட்டத்தானே வேண்டும்.

— செந்தில்நாதன்

## பயணத்தில் பார்த்தது!



# சாக்லேட் நிறைந்தது, சுவை மிகுந்தது, எல்லோர் மனதிலும் தனியிடம் பெற்றது

நியூட்ரின்
சாக்லேட்
Eclairs
அதிக பால்
அதிக வெண்ணெ
அதிக சாக்லேட்







இந்தியாவில் மிக அதிகமாக விற்பனையாகும் மிட்டாய்கள்

நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி (பி) லிமிடெட், சித்தூர், ஆந்திர பிரதேசம்

CLARION/NC/8338/Tam.

# தண்ணீர் பிரச்னையில் நட்சத்திரங்கள்!

நட்சத்திரங்களே! என்னை மன்னிக்கவும். தண்ணீர் கஷ்டத்தை மறந்திருக்க வேடிக்கையாக உங்களை வம்புக்கு இழுத்திருக்கிறேன்.

—நிரஞானி



● சிலுக்கு நீச்சல் குளத்தில் குளிக்க வேண்டிய காட்சி ஒன்றை ஊருக்கு வெளியே அமைக்கப்பட்டிருந்த செயற்கைக் குளத்தில் ஏற்பாடு செய்திருந்தார்களாம்!

புறப்படும் முன்பு சிலுக்கு தயாரிப்பாளருக்குப் போன் செய்து ''என் கார் ரிப்பேர். ஒரு லாரியை அனுப்பி வையுங்கள். அதில் புறப்பட்டு வருகிறேன்'' என்றாராம்!

தயாரிப்பாளர் திகைத்துப் போய் ஒரு லாரியை அனுப்பி வைத்தார். அடுத்த அரை மணி நேரத்தில் சிலுக்கு லாரியில் வந்து இறங்கினர். சிலுக்கு மட்டுமா?

அவர் வீட்டு அண்டா, குண்டா, பிப்பாய், சொம்பு, தம்ளர் எல்லாம் வந்ததாம். படப் பிடிப்பு முடிந்து சிலுக்கு வீடு இரும்பும்போது அத்தனை பாத்திரங்களிலும் தண்ணீர் பிடித்துக் கொண்டு போனாராம்!




● இசையமைப்பாளர் குன்னக்குடி வைத்தியநாதன் மழையை வரவழைக்க முழங்கால் அளவு தண்ணீரில் நின்று கொண்டு பிடில் வாசிக்கத் தயாராம் — மறுபடியும்!

முழங்கால் நனையும் அளவு குளம் குட்டைகளில் தண்ணீர் இல்லாததால் ''மெட்ரோ வாட்டர் சப்ளை லாரிகளின் மீது அமர்ந்து இனி பிடில் வாசிக்கப் போகிறேன்'' என அறிவித்துள்ளார் இவர்.

● வாணி கமலஹாசன் (கமலஹாசனிடம்): பம்பாயிலிருந்து திரும்பி வரும்போது ஞாபகமா எங்கம்மா வீட்டிலே இருந்து நாலு குடம் தண்ணியை கேபினெட்டிலே கொண்டு வாங்க... மறந்துடாதீங்க.



● ''மழை பெய்யாததற்குக் காரணம் நான் தான்னு எல்லோரும் சொல்றாங்க. 'தூறல் நின்னுபோச்சு'ன்னு நான் படம் எடுத்ததுக்கு அப்புறம் மழையே வரலையாம்! காக்காய் உட்காரப் பனம்பழம் விழுந்த கதையாக அல்லவா இருக்கு இது!

சரி, அப்படீன்னு 'முந்தானை முடிச்சு' படத்துப் பேரை நாளைக்கே 'ஜலப் பிரவாகம்னு' மாத்திக்க நான் தயார். மழை வரத் தயாரா?''

இவ்வாறு பாக்யராஜ் மேடையில் சவால் விட்டுப் பேசியிருக்கிறார்.

பி.கு.: பாக்யராஜ் சவாலை ஏற்க மழை பூமியை நோக்கி ஓடி வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனென்றால் இன்றைக்கு அவர் காட்டிலேதான் மழை பெய்யுது என்று ஜனங்கள் பேசிக்கொள்கிறார்கள்.





● ''அடடா! இத்தனை பயங்கரமாகத் தண்ணீர் பிரச்னை விஸ்வரூபம் எடுக்கும் எனத் தெரிந்திருந்தால் 'அம்மா', 'அக்னி சாட்சி' படங்களில் அழுது அழுது நடித்து வீணை கண்ணீரை அண்டாவில் பிடித்துச் சேர்த்து வைத்திருப்பேனே'' என்கிறார் சரிதா.



● மக்களுக்கு அரசாங்கம் குடிக்கத் தண்ணீர் கிடைக்க வழி செய்யும் வரையில் தம் விட்டு பாத்ரூம் முன்பு 'குளிக்காத விரதம்' இருப்பதாக முடிவு செய்துள்ளார் சிவாஜி கணேசன்.

பி.கு.: உண்மையான விஷயம் வேறு. அவர் வீட்டுக் குழாயில் தண்ணீர் வரவில்லை.

● மனோரமா வீட்டில் சொட்டுத் தண்ணீர் கூட இல்லாமல் போகவே குடத்தைத் தூக்கிக் கொண்டு குடிசைப் பகுதியில் உள்ள குழாயடிக்குப் போனாராம்! அங்கே ஒரே கும்பல்! மனோரமாவை அனைவரும் வேடிக்கை பார்த்ததோடு சரி. தண்ணீர் பிடிக்க விடவில்லை.

பார்த்தார் மனோரமா! மெட்ராஸ் சேரி பாஷையை (கஸ்மாலம்... பன்னாடை எக்சட்ரா...எக்சட்ரா) எடுத்து விட்டுச் சண்டை போட்டதோடு, ''வா வாத்தியாரே குழாயண்டே! தண்ணி கிடைக்காட்டி நான் வுடமாட்டேன்'' என்று பாடியவாறே எப்படியோ ஒரு குடம் தண்ணீர் பிடித்துக் கொண்டு வந்து விட்டாராம்.






## அத்தியாயம் 51

### காலைப் பிறை

மூத்தையன் பிடிபட்ட அன்றிரவைச் சிவராத்திரியாகக் கழித்தவர்கள் பலர் இருந்தனர். அவர்களில் கல்யாணி ஒருத்தியென்று சொல்லவும் வேண்டுமோ?

பொய் மயமான இந்த உலகத்தில், எந்த ஒன்றை அழிவில்லாத உண்மை என்று கல்யாணி எண்ணியிருந்தாளோ அதுவே இன்று பொய்யாகிப் போய் விட்டதை அவள் கண்டாள். துன்ப மயமான இந்த வாழ்க்கையை எந்த ஒரு இன்பத்தைக் கருதி அவளால் சகித்துக் கொண்டிருக்க முடிந்ததோ, அந்த இன்பம் வெறும் மாயக் கனவு என்பதை அவள் அறிந்தாள். மூத்தையனுடைய காதல் பொய்யாய்ப் போய்விட்டது! அவனுடன் தான் இன்ப வாழ்க்கை நடத்துவதைப் பற்றிக் கட்டியிருந்த ஆகாயக் கோட்டையெல்லாம் சிதறி விழுந்தன. ஆஹா! இத்தனை காலமும் கானல் நீரையல்லவா தேடியலைந்து கொண்டிருந்தோம்? என்ன பேதைமை!

அன்று சாயங்காலம் அவளுடைய காதில் விழுந்த ஊரார் பேச்செல்லாம் ஒவ்வொன்றாய் ஞாபகம் வந்தது. இருடன் பிடிபட்ட காரணத்தைப் பற்றி இரண்டு மூன்று விதமாக வதந்திகள் பரவியிருந்தன. "இந்தப் பக்கத்தில் யாரோ ஒரு பெண்பிள்ளை அவனுக்குச் சிநேகமாம். அவள்தான் பரிசுத்தொகைக்கு ஆசைப்பட்டு அவனைக் காட்டிக் கொடுத்து விட்டாளாம்" என்று ஒரு வதந்தி. "அதெல்லாம் இல்லை. போலீஸாரே ஒரு அழகான தாஸியைப்பிடித்து அனுப்பி மூத்தையன் அவளுடைய மோகத்தில் ஆழ்ந்திருக்கும் போது பிடித்து விட்டார்களாம்!" என்று இன்னொரு வதந்தி. படுகைக் காட்டில் ஆடுமேய்த்துக் கொண்டிருந்த இடைப் பையன் ஒருவன் காட்டு வழியாக ஒரு பெண் பிள்ளை – ரொம்ப அழகான பெண் பிள்ளை போனதைப் பார்த்ததாகச் சொன்னதன் பேரில் இம்மாதிரி வதந்திகள் எல்லாம் கிளம்பி யிருந்தன.

கல்யாணி அன்று மத்தியானம் கொள்ளிடத்துக்குப் போய்க் குளிக்காமல் திரும்பி வந்த சமாசாரம் ஊரில் எல்லோருக்கும் தெரியுமாதலால், அவ

னிடம் திருடன் பிடிபட்ட விருத் தாந்தத்தைப் பற்றிப் பேசுவதற்கா கவே பலர் வந்தார்கள். முத்தைய னுக்குக் கல்யாணியைக் கொடுப்ப தாக முன் ஒரு பேச்சு இருந்தபடியால் அவளுடன் இதைப் பற்றி வம்பு வளர்ப் பதில் அவர்களுக்கு ஒரு சுவாரஸ்யம். ஆனால் கல்யாணியோ தான் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல், அவர்கள் சொல்வதையெல்லாம் மட் டும் ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந் தாள்.

* * *

இரவு தூக்கமில்லாமல் புரண்டு கொண்டிருந்தபோது மேற் சொன்ன




தெல்லாம் கல்யாணிக்கு நினைவுவந் தது. வதந்திகளுக்கும் உண்மைக்கும் எவ்வளவு நெருங்கிய சம்பந்தம் என் பதை எண்ணி அவள் திகில் அடைந் தாள். கோர்ட்டு விசாரணையின் போது ஒருவேளை தன்னுடைய இரக சியம் வெளியாகி விடுமோ? முத்தை யனைக் காட்டிக் கொடுத்தவள் இவள் தான்என்று தெரிந்துவிடுமோ? அந்தப் பிராமணன் பரிசு தனக்கே வேண்டு மென்று ஆசைப்பட்டு ஒருவேளை வெளியிடாமல் இருக்கலாம். ஒருவேளை அவன் சொல்லி விட்டானானால் — அது முத்தையனுக்குத் தெரிந்து போய் விடுமே!

''அவனுக்குத் தெரிந்தால் என்ன?'' என்று கல்யாணி எண்ணமிட்டாள். உண் மையில் அவனுக்குத்தான் முக்கியமாகத் தெரிய வேணும். அந்தப் பாவி தனக் குச் செய்த துரோகத்துக்கு, தான் ஏன் இப்படிப் பழிவாங்கக் கூடாது? ஆமாம்; விசாரணை நடக்கும்போது கோர்ட் டுக்கே போய், ''நான்தான் முத்தை யன் இருக்கும் இடம் சொன்னேன்: எனக்குக் கொடுங்கள் பரிசை!'' என்று கேட்கலாம். முத்தையன் கைதிக் கூண்டில் நிற்கும்போது அம்மாதிரி போய்க் கேட்க வேண்டும். அப் போது அவன் முகம் எப்படி இருக்கும்?

ஆனால் அவன் அதுவரை உயிரோ டிருப்பானா? இப்போதுதான் அவன் உயிரோடு இருக்கிறானோ என்னமோ?— ஐயோ! என்னதான் அவன் துரோகம் செய்தாலும், நானா அவனுக்கு யமனை மூடிய வேண்டும்? என் வாக்கினா லேயா அவனுக்கு இந்தக் கதி நேர வேண்டும்? ஸ்வாமி! முத்தையன் பிழைப்பானா? — ஆம்; அவன் சாகக் கூடாது. அவனை விசாரணை செய்து எட்டு வருஷம் அல்லது பத்து வருஷம் ஜெயிலில் போட வேண்டும். நாம் ஜெயிலுக்குள்ளே போய் அவனைப் பார்த்து, ''முத்தையா! நீ எனக்குத் துரோகம் பண்ணினாய். அதற்கு நான் பழிக்குப் பழி வாங்கினேன்; ஆனாலும் இந்தப் பாவியின் மனத்திலிருந்து உன் னுடைய ஞாபகம் போக மாட்டேன் என்கிறது!'' என்று சொல்ல வேண் டும்......

இப்படி எண்ணிய கல்யாணி தனக் குத் தானே சிரித்தாள். அவளுடைய சிரிப்பின் ஒலி அவளுக்கே பயங்கரத்தை அளித்தது. சீச்சீ! என்ன அசட்டு எண் ணங்கள்! முத்தையன் பல வருஷங்கள் ஜெயிலிலே இருப்பது: அத்தனை கால மும் தான் உயிரோடிருந்து அவனைப் போய்ப் பார்ப்பது! இதெல்லாம் நடக் கக் கூடியதா? இனிமேல் நமக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? — இந்த உயிர் வாழ்க்கைதான் இனிமேல் என் னத்திற்கு? முத்தையனுடைய காதல் பொய்யாய்ப் போன பிறகு உயிர் வாழ வும் வேண்டுமா? உயிர் வாழத்தான் முடியுமா? இனி இரவு நேரங்களில் தூக்கம் வரப்போவதில்லை. தூக்கம் வராமல் முத்தையனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்து பைத்தியம் பிடித்தாலும் பிடித்து விடும். இப் போதே மனம் இப்படி இருக்கிறதே! போகப் போக எப்படி ஆகுமோ,' என் னமோ? பைத்தியம் பிடித்துப் போய் ஊரார் எல்லாரும் சிரிக்கும்படி உயிர்

வாழ வேண்டுமா — இந்த எண்ணம் தோன்றியதும் கல்யாணி அளவிலாத பயங்கரமடைந்தாள். அடுத்த நிமிஷத்தில் அவள் ஓர் உறுதி கொண்டாள். இன்று ராத்திரி எப்படியாவது தன் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டியது. வேறு விமோசனம் கிடையாது.

* * *

டிங், டிங், டிங் என்று கடிகாரத்தில் மூன்று மணி அடித்தது. கல்யாணி சத்தம் செய்யாமல் எழுந்திருந்தாள். அத்தை காடாந்த நித்திரையில் ஆழ்ந்திருக்கிறாள் என்பதைக் கவனித்துவிட்டு வாசற் கதவை மெதுவாகத் திறந்து கொண்டு வெளியே கிளம்பினாள். நடு வீதியில் நாய் ஒன்று படுத்துக் கிடந்தது. அது குரைத்து ஊர்க்காரர்களை எழுப்பி விடப் போகிறதே என்று கல்யாணி ஒரு கணம் திகில் அடைந்தாள். ஆனால் அது குரைக்கவில்லை. அவள் வீதியோடு கொஞ்ச தூரம் போன பிறகு அந்த நாய் ஆகாயத்தை நோக்கிக் கொண்டு மிகவும் தீனமான குரலில் அழுதது. நாய் அழுதால் யமன் வருவதற்கு அறிகுறி என்று கல்யாணி கேள்விப் பட்டிருந்தபடியால் அவள் உடம்பு சிலிர்த்தது.

கிருஷ்ணபட்சத்துக் காலைப் பிறையின் ஒளி மங்கலாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. கல்யாணி ஒரு கையினால் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு கொள்ளிடக் கரையை நோக்கி நடந்தாள். ஆற்றிலே விழுந்து இறந்து போய்விடுவது என்ற எண்ணத்துடனே தான் அவள் அந்த நேரத்தில் வீட்டை விட்டுக் கிளம்பியதும். ஆனால், கிட்டத் தட்ட இராஜன் வாய்க்கால் அருகே வந்தபோது அவளுக்கு ஒரு சந்தேகம் தோன்றிற்று. ஐயோ! தனக்கு நீந்தத் தெரியுமே! தண்ணீரில் விழுந்தால், நீந்திக் கரை ஏறத்தானே தோன்றும்? உயிர் போகுமா? கழுத்திலே கல்லைக் கட்டிக் கொண்டு விழுகிறது என்று சாதாரணமாய்ச் சொல்வார்கள். நிஜமாகவே அப்படிச் செய்ய முடியுமா? கொள்ளிடக் கரையில் கல்லுக்குப் போவதெங்கே? அல்லது கயிற்றுக்குத் தான் எங்கே போவது? புடவைத் தலைப்பில் கல்லைக் கட்டிக் கொண்டு விழுந்தால் தலைப்பிலிருந்து கல் நழுவி விட்டால் என்ன செய்வது? ஐயோ! உயிரை விடுவதென்பது சொல்வதற்குச் சுலபமாயிருக்கிறதே தவிர, மிகவும் கஷ்டமான காரியமாக அல்லவா தோன்றுகிறது?

கல்யாணி ராஜன் வாய்க்காலின் பாலத்தை அடைந்தபோது, அதைக் கடந்து மேலே செல்லவில்லை. அங்கேயே சற்று நேரம் நின்று சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு வாய்க்கால் ஓரமாய்ச் சென்று தண்ணீர்க் கரையில் ஓரிடத்தில் உட்கார்ந்தாள். சிலுசிலுவென்று காற்றடித்தது. கிராமத்தில் ஜாமக் கோழி கூவிற்று. காக்கையொன்று அரைத் தூக்கமாய்க் கரைந்தது.

கல்யாணி, ''இன்று நான் இறக்க வேண்டுமென்று விதி இருந்தால், எப்படியும் யமன் வந்து என்னைக் கொண்டு போவான் அல்லவா? பார்க்கலாம்'' என்று எண்ணமிட்டாள். பிறகு,



''உகாண்டா பாதுகாப்பு அமைச்சர் தங்கள் நாட்டுக்கும் இந்தியாவுக்கும் இடையே உள்ள சில ஒற்றுமைகளைப் பற்றி நிருபர்களிடம் கூறினார்: அந்த நாட்டின் ஆளும் கட்சியின் சின்னமும் கை; இந்திரா காந்தி போலவே அந்நாட்டின் அதிபர் டாக்டர் ஒபோட்டோவும், சில வருட இடைவெளிக்குப் பின்பு 1980ஆம் ஆண்டிலே மீண்டும் பதவிக்கு வந்தார்!

—எஸ்.டி. வாசுதேவன்

''யமனே! வா! என்னைக் கொண்டு போ!'' என்று வாய் விட்டுக் கூறினாள்.

அப்படி அவள் சொல்லி வாய் மூடினாளோ இல்லையோ, எங்கேயோ வெகு தூரத்தில் டக்டக், டக்டக் — என்று சத்தம் கேட்டது.

கல்யாணியின் ரோமம் சிலிர்த்தது. உடம்பெல்லாம் நடுங்கிற்று. ஒருவேளை தன்னுடைய பிரார்த்தனையைக் கேட்டு யமன்தான் வருகிறானோ?

டக்டக், டக்டக் — இந்த ஒலி நிமிஷத்துக்கு நிமிஷம் பெரிதாகிக் கொண்டு வந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் அது வெகு சமீபத்தில் வந்து விட்டது.

கல்யாணி கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

இரண்டு நிமிஷத்துக்கெல்லாம் அந்த டக் டக் சத்தம், கல்யாணிக்கு எதிரில் வாய்க்காலின் அக்கரையில் வந்து நின்றது. சந்தேகமில்லை. சத்தம் நின்று

ஒரு நிமிஷம் ஆயிற்று. இரண்டு நிமிஷம்ஆயிற்று, மூன்று நிமிஷமும் ஆயிற்று. கல்யாணிக்கோ இந்த மூன்று நிமிஷமும் மூன்று யுகமாக இருந்தது. அவளுடைய படபடப்பும் அதிகமாகிக் கொண்டு வந்தது. மறுபடியும் ஒரு தடவை ''யமனே வா! சீக்கிரம் வந்து என்னைக் கொண்டு போ!'' என்று கூவினாள்.

அடுத்த கணம் கல்யாணி தன்னுடைய ஞாபகத்தை இழந்தாள். தண்ணீரில் 'குபுக்' என்று ஒரு சத்தம் கேட்டது!

## அத்தியாயம் 52

## பொழுது புலர்ந்தது

முத்தையன் கல்யாணியைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவித்ததும், சர்வோத்தம சாஸ்திரி தாமே நேரில் போய்க் கல்யாணியை அழைத்து வருவது என்று தீர்மானித்துக் கொண்டார். வேறு யாராவது போனால் கலவரப் படுத்தி விடுவார்கள் என்றும், ஒருவேளை அவள் வருவதற்கு மறுத்து விடலாம் என்றும் நினைத்தார். அதோடு கூட முத்தையன் இருக்கும் இடத்தைக் கல்யாணி தெரிவித்ததற்குக் காரணமான மர்மம் ஏதோ இருக்க வேண்டும் என்பது அவருடைய மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. இவ்வளவு கண்டுபிடித்த பிறகு அதைக் கண்டு பிடிக்காமற் போனால் என்ன பிரயோஜனம்?

அவர் ஏற்கனவே கேள்விப் பட்டிருந்த விஷயங்களையும் வைத்துக் கொண்டு, கல்யாணிக்கும் முத்தையனுக்கும் இருந்து வந்த சம்பந்தத்தை ஒருவாறு அவர் ஊகித்துஅறிந்துகொண்டார். அவர்கள் காதலர்கள் என்பதிலும் சென்ற சில தினங்களாகக் கல்யாணிதான் முத்தையனுக்கு உணவு அளித்துக் காப்பாற்றி யிருக்க வேண்டுமென்பதிலும் சந்தேகமில்லை. ஆனால் அன்றைய தினம் அவளுடைய மனக் கலக்கத்திற்குக் காரணம் என்ன? முத்தையனுடைய 'உண்மைக் காதலி'யைப் பற்றி ஏதோ சொன்னாளே, அது என்ன? அப்படியெல்லாம் இருக்குமா? முத்தையன் அத்தகைய மனிதனாய்த் தோன்றவில்லையே? அவனைப் போலீஸார் சூழ்ந்தபோது அங்கே வேறு ஸ்திரீயும் இருக்கவில்லையே? என்ன காரணத்தினால் அவளுக்கு அப்படிப்பட்ட விபரீதமான சந்தேகம் இருக்கக் கூடும்?

கல்யாணியைப் பார்த்துப் பேசினால் தான் இந்த மர்மம் வெளியாவதற்கு வழி உண்டு என்று எண்ணிய சாஸ்திரி மாயவரத்திலிருந்து இரவு மூன்று மணிக்கே குதிரை ஏறிப் பூங்குளத்துக்குப் பிரயாணமானார். திருடனைப் பிடிக்கிற வரையில் குதிரையில் போனால் அவனுக்கு முன்னெச்சரிக்கை கொடுத்தது போலாகும் என்று அவர் சைக்கிளில் போய்க் கொண்டிருந்தார். இப்போது அந்தப் பயமில்லையாதலாலும், இரவு நேரமாதலாலும் குதிரை ஏறிக் கிளம்பினார்.

* * *

அவர் பூங்குளம் மூங்கில் பாலத்துக்குக் கிட்டத் தட்ட வந்தபோது சுமார் நாலரை மணி இருக்கும். கிழக்குத் திசையில் அப்போதுதான் சிறிது வெண்ணிறம் கண்டது.

நன்றாய் விடிந்த பிறகே ஊருக்குள் போக வேண்டும் என்று எண்ணிய சாஸ்திரி குதிரையின் லகானைப் பிடித்து இழுத்து நிறுத்தினார். வாய்க்காலின் அந்தப்புறம் அவர் தற்செயலாகப் பார்த்த போது ஒரு பெண் உருவம் தலை மயிரை அவிழ்த்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பது போல் தெரிந்தது. அந்த வேளையில் அத்தகைய காட்சியைக் கண்டபோது, மகா தைரியசாலியான சாஸ்திரிகூடச் சிறிது கலவரம் அடைந்தார். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ''யமனே! வா! சீக்கிரம் வந்து என்னைக் கொண்டு போ!'' என்ற குரலைக் கேட்டதும், அவருடைய பயங்கரம் அதிகமாகத்தான் ஆயிற்று. ஆனால் அடுத்த நிமிஷம் அந்த உருவம் தண்ணீரில் தலை குப்புற விழ, அதனால் உண்டான 'குபுக்' என்ற சத்தத்தைக் கேட்டதும், சாஸ்திரியின் கலவரம் எல்லாம் பறந்து

'உங்கள் மாமியாருக்கு ஒரு கோயில் கட்ட வேண்டும். உங்கள் மருமகளுக்கு ஒரு கோயில் கட்ட வேண்டும்' என்று புகழ் கிறோமே. நிஜமாகவே மாமியார் மருமகள் இருவர்பெயரும் கொண்ட கோவில் எங்கே இருக்கிறது தெரியுமா? குவாலியரில்! ''ஸாஸ் (மாமியார்) — பஹூ (மருமகள்) டெம்பிள்! (நேரில் பார்த்த) தகவல்: ரோஜி





தமிழகத்தின்
சிறப்புகள்
எவை, எவை?



கோவில்,
கோபுரம்,
சங்கீதம்,
நாதஸ்வரம்,
பரதநாட்டியம்,
இட்லி,
தோசை,
**நரசுஸ் காபி!**

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

"தெர்மலோ" காபி!



**நரசுஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்:
தமிழ்நாடெங்கும்.

ADWAVE NCC 2165

போயிற்று. உடனே குதிரையிலிருந்து குதித்து, மூங்கில் பாலத்தை இரண்டே எட்டில் தாண்டி, இக்கரைக்கு வந்து, வாய்க்காலின் கரை யோரமாய் ஓடினார். தண்ணீரில் மேலே மிதந்த தலைமயிரின் மூலமாய்க் கல்யாணி போகுமிடத்தைக் கண்டு பிடித்து, கரையிலிருந்தபடியே அவளைத் தூக்கிக் கரை சேர்த்தார்.

கீழ்த் திசையிலே தோன்றிய வெளிர் நிறம் சிறிது சிறிதாகப் பவுன் நிறத்துக்கு மாறிக் கடைசியில் பத்தரை மாற்றுப் பசும் பொன்னின் நிறத்துக்கு வருகிறது. நட்சத்திரங்கள் நன்றாய் ஒளி மங்கி மறையத் தொடங்குகின்றன. ஆகாயத்தின் கரு நிறம் நல்ல நீல நிறமாக மாறி வருகின்றது. நாலாபுறத்திலும் பட்சிகளின் கோலாகலமான சங்கீதக் கச்சேரி நடக்கின்றது.

இத்தகைய நேரத்தில்தான் கல்யாணி கண் விழித்தாள். முதலில் அவள் கண்களுக்குத் தெரிந்தது சாஸ்திரியின் முகம். இதென்ன? இந்தப் பிராமணன் இங்கு எங்கே வந்தான்? தன்னுடைய உடம்பெல்லாம் ஜில்லென்றிருப்பதைக் கல்யாணி உணர்ந்தாள். ஈரப் புடவை: ஈரத் தலை. ஓகோ! தண்ணீரிலிருந்து தன்னை அந்தப் பிராமணன் கரையிலே இழுத்துப் போட்டிருக்கிறான். தான் அதிகாலையில் எழுந்து உயிரை விடுவதற்காக அங்கு வந்தது எல்லாம் ஞாபகம் வந்தது. அக்கரையில் குதிரை ஒன்று சேணம் போட்டு நிற்பதைப் பார்த்தாள். குதிரையின் மேல் இந்தப் பிராமணன் வந்ததைத்தான் யமன் வருவதாகத் தான் எண்ணியிருக்க வேண்டும்.

கல்யாணி எழுந்திருந்து உட்கார்ந்தாள். சாஸ்திரியைப் பார்த்து, ''ஐயா! உங்களை என் உயிரைக் கொண்டு போக வந்த யமன் என்று நினைத்தேன். நீங்களோ என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறீர்கள்'' என்றாள்.

அதைக் கேட்டதும் சாஸ்திரியின் முகத்தில் புன்னகை தோன்றியது. ஆனால், கல்யாணியின் அடுத்த வார்த்தையில் அந்தப் புன்னகை எரிந்து போயிற்று.

''....ஆனால் ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள் ஐயா! நான் இறந்துபோயிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்?'' என்றாள்.

''உனக்கு என்ன துக்கமோ, எதற்காக நீ சாக நினைத்தாயோ, எனக்குத் தெரியாது அம்மா! ஆனால் உன்னை அழைத்து வருவதாக முத்தையனிடம் வாக்கு அளித்துவிட்டு வந்தேன். நான் வந்ததும் நீ ஆற்றில் விழுந்ததும் சரியாயிருந்தது.''

''என்ன? முத்தையனா? முத்தையன் என்னை அழைத்து வரச் சொன்னானா? நிஜந்தானா? நிஜமாக முத்தையன் என்னை அழைத்துவரச் சொன்னானா?'' என்றாள் கல்யாணி.

''திருச்சிற்றம்பலம் பிள்ளை மகள் கல்யாணி என்பது நீதானே?''

''நான்தான் அந்தப் பாவி.''

''முத்தையன் உன்னைத்தான் பார்க்க வேண்டுமென்று சொன்னான். வந்தால் அழைத்துப் போகிறேன்.''

''வந்தாலா? முத்தையன் அழைத்து நான் வராமலும் இருப்பேனா? இதோ இப்படியே வருகிறேன், அழைத்துப் போங்கள்.''

''அது சரியல்ல, அம்மா! நீ வீட்டுக்குப் போய்ப் புடவை கட்டிக்கொள். வாய்க்காலில் குளித்து விட்டு வந்ததாக வீட்டில் சொல்லு. நான் பிறகு வந்து, முத்தையன் கேஸில் சாட்சிக்காக நீ வரவேணுமென்று சொல்கிறேன். அப்புறம் நீ வரலாம்.''

''ஐயா! சத்தியமாகச் சொல்லுங்கள் நீங்கள் யார்?'' என்றாள் கல்யாணி.

''கோபித்துக் கொள்ளாதே கல்யாணி! நான் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர். நேற்று உன்னை ஏமாற்றித்தான் விட்டேன். அதற்குப் பரிகாரம் தேட இப்போது வந்திருக்கிறேன். என்னை நம்பி வா!'' என்றார் சாஸ்திரி.

கல்யாணி அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். என்ன நடந்தாலும் சரி, அவருடன் போவது என்று உறுதி கொண்டாள். (தொடரும்)



**நிச்சயமாக நகைச்சுவை அல்ல: இது உண்மை!**

திருவனந்தபுரம் கிழக்கே கோட்டையில் ஒரு லாட்டரிச் சீட்டு விற்பனையாளரின் இரு பிள்ளைகளின் பெயர்கள் 10 லட்சம், 5 லட்சம்!

-கருங்கல் ஆர். ஜார்ஜ்

# ராலி:.பேன் விசிறிகளின் உள்ளமைந்த மேம்பாடு இதற்கு உத்தரவாதம் உண்டு






முற்றிலும் சமநிலைப்
படுத்தப்பட்ட இயந்திர
நுணுக்கம் மிக்க
வடிவமைப்பின் காரணமாக,
ராலி:.பேன் ஸூப்பர்ஸ்டார்
தொல்லையின்றி ஓடுகிறது




தொல்லையற்ற ஓட்டம் என்கிற
கண்ணோட்டத்தில் பார்க்கிறபோது,
ராலி:.பேன் ஸூப்பர்ஸ்டார்
இணையற்று விளங்குகிறது. டபுள் பால்
பேரிங்குகள் இருப்பதால் மோட்டார்
நீண்ட காலம் உழைப்பதோடு,
இரைச்சலற்ற ஓட்டம் கிடைக்கிறது.
பிளேடுகள் மிக நுணுக்கமாக
சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால்,
சீரான காற்றோட்டம் அளிக்கிறது.
ஆல்-மெட்டல் ரெகுலேட்டர்
என்பதால் நீடித்த உழைப்பு
நிச்சயமாகிறது. ஆகவே பணியில்
ஈடிணையற்ற விசிறி உங்களுக்குக்
கிடைக்கிறது.
ஸூப்பர்ஸ்டார் மீது நம்பிக்கை
வையுங்கள். இதன் செயல்திறனுக்கு
இணையே இல்லை.

**ராலி:.பேன்**

தரமோங்கிய தயாரிப்புகளுக்கு




**ராலீஸ்**

டாட்டா டெக்னாலஜி க்ரூப

ULKA-RFC-3-82-TH

### நடந்த கதை

● புதுதில்லியின் புதுமைச் சூழலினிடையே பழைமையில் ஊறிப்போன கார்த்திக்கின் குடும்பம். அப்பா கோயில் குருக்கள். அண்ணனையும் அதே வழியில் தமக்கு உதவப் பழக்கி விட்டார். மன்னி வைதீகக் குடும்பத்திலிருந்து வந்த கிராமத்துப் பெண். சமையலறை உண்டு தானுண்டு என்றிருக்கும் அம்மா. குடும்பத்தில் கார்த்திக்கைப் புரிந்து கொண்டு அனுதாபத்துடன் பேசும் ஒரே நபர் அத்தைதான். அவள் உதவியுடன் இன்ஜினியரிங் படிக்கும் கார்த்திக், இந்தக் குடும்பச் சூழலிலிருந்து விடுபட ஆர்வமாய் இருக்கிறான்.

பல்கலைக் கழகத்தில் நடந்த ஆர்ப்பாட்டங்களின்போது அடிபட்டு விழுந்த தாராவை சிகிச்சைக்கு மருத்துவ மனையில் சேர்த்து விட்டு வருகிறான் கார்த்திக். அப்பாவுக்கு உதவியாகக் கோயிலில் பணியாற்றிக் கொண்டிருந்த போது அவளை மறுபடி சந்திக்கிறான். சொந்தக் கார் ஓட்டியபடியே கம்யூனிஸம் பேசும் அவள், விட்டு விடுதலையாகத் துடிக்கும் இவனைக் கவர்கிறாள்.

விடுமுறையில் அத்தையுடன் கிராமத்துக்குப் போயிருக்கும்போது அக் கிராமத்தின் ஹீரோ நாச்சாமியையும் எதிர் வீட்டுப் பெண் — அலேபாயும் மனமுடைய இளம் விதவை எச்சுமியையும் சந்திக்கிறான், கார்த்திக். தந்தி வருகிறது. அவன் பரீட்சையில் தேறி விட்டதாக. கரிசனத்துடன் தந்தி அனுப்பிய தாரா கடைசி வார்த்தையாக 'லவ்' என்று சேர்த்திருந்தாள். அது ஏற்படுத்திய கிளுகிளுப்புடன் டில்லி திரும்புகிறான். அவன் படிப்பு, எதிர்காலம் பற்றியெல்லாம் சிறிதும் அக்கறை காட்டாத பெற்றோர் இப்போது ஜாதகம் வாங்க மட்டும் ஆர்வம் கொள்வதைப் பார்த்து எரிச்சலுடன் இரைந்து விட்டு வெளியேறுகிறான்.

பல்கலைக் கழகத்திலேயே இவன் மூன்றாவது 'ரேங்க்'கில் தேறி இருப்பதை உணர்த்திய தாரா, "யூ ஆர் க்ரேட் யார்!" என்று அவன் கை பற்றிக் குலுக்குகிறாள்.

# ஒரு சங்கமத்தைத் தேடி...

வாஸந்தி



அவன் சில விநாடிகள் நம்ப முடியாத திகைப்புடன் நின்றான். அவளுடைய மிருதுவான ஸ்பர்சம் ரத்த நாளங்களின் வழியாகப் பயணித்து இதயத்தைத் தொட்டது. அவனுள் ஏற்படுத்திவிட்ட கிளுகிளுப்பை உணராதவள் போல் அவள் சரளமாய்ச் சிரித்தாள்.

எத்தனை அழகாகச் சிரிக்கிறாள்!

"இப்படி ஒரு கெட்டிக்காரத் தனத்தை உள்ளே வெச்சுண்டு எப்படி ஒரு சாதுப் பிள்ளை மாதிரி நடிக்கிறே?"

அவன் மெள்ள யதார்த்தத்துக்கு இறங்கினான். கூச்சத்துடன் தன் கைகளை விடுவித்துக் கொண்டு, தான் அவளுடன் அந்த மாதிரி நின்றதை யாராவது பார்த்திருப்பார்களோ என்று அவசரமாக ஒரு நோட்டம் விட்டு,

"தாங்க்யூ" என்றான். "நான் நடிக்கவுமில்லே, சாதுவும் இல்லே."

அவள் அவனைத் தீர்க்கமாகப் பார்த்தாள். அவளது சுபாவத்தில் இல்லாத தீவிரத்துடன் சொன்னாள்;

''நீ என்னன்னு எனக்குப் புரியல்லே. ஆறு மத்த பையன்களுக்கும் உனக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு. அவங்களுடைய ஹம்பக் உங்கிட்ட இல்லே. அதனுலேதான் உன்னை எனக்குப் பிடிக்கிறது.''

ஜிவுஜிவு என்று உஷ்ணம் அதிகரித்து நரம்புகள் புடைத்தன.

அவன் தன் சங்கோஜத்தை மறைக்கச் சிரத்தைச்சற்றுத்தாழ்த்தி ''தாங்க்யூ!'' என்று சிரித்தான்.

''இதைப்பார், எற்கனவே நிசல்டைப்பத்தி நீ சொன்னதை கேட்டு ஒரு மயக்கத்திலே இருக்கேன். இன்னும் எதையெல்லாமோ சொல்லி என் ப்ளட் பிரஷரை ஏத்தாதே!''

அவள் சிரித்தாள்.

''சரி இறக்கிடறேன்!'' என்று விளையாட்டாக அவன் தலையை ஒரு தட்டுத் தட்டினுள்.

அவன் சரேலென்று விலகி நடந்து கொண்டே சொன்னுன்:

''உன்னுலே முடியாது. நான்தான் பத்தியமா இருக்கணும்!''

''ஓ பாய்!'' என்று அவள் பின்னுல் சிரிப்பது அவனுக்குக் கேட்டது. மார்பு வெகு வேகமாகப் படபடத்தது. இனம் புரியாத இன்ப போதையில் மனசு மிதந்தது. என்ன பெண் இவள்! இவளுடைய பல்வித வேலைகளையும் விட்டு விட்டு நம்மை ஏன் தொடருகிருள்! இவளுடைய வார்த்தைகள் யோசனை இல்லாமல் நுனி நாக்கிலிருந்து வருபவையா, ஆத்மார்த்தமாக வருபவையா? 'ஒரு ஜட வஸ்துவைப் பிடிக்கிறது' என்று சொல்கிற மாதிரிதான் அவனைப் பார்க்கும்போதெல்லாம் ''ஐ லைக் யூ'' என்கிருளோ? 'ஐ லைக் ஐஸ்கிரீம்' 'ஐ லைக் காஃபீ' என்கிற ரீதியில்?

இல்லாவிட்டால் அவளுக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்?



இத்தனை கேள்விகளுக்கும் ஒட்டாமல் மனசு தனித்து நின்றது. தலைக்கேறிவிட்ட போதையிலிருந்து விழித்துக் கொள்ள மறுத்தது. 'எனக்கும் அவளைப் பிடிக்கிறதே' என்றது.

தட் இஸ் இட்! நானும் அவளை விரும்புகிறேன் — அவளை நேசிக்கிறேன்!

**''ஹ**ல்லோ கார்த்திக்! கங்க்ராட்ஸ்!''

அவன் சரேலென்று தரைக்கு வந்தான். ஆஃபீஸ் அறையின் வாயிலில் ஒரு சின்னக் கும்பல் நின்றிருந்தது - அவனுடைய வகுப்புத் தோழர்கள், ப்ரொஃபஸர்கள். அனுவாலியா ஓடிவந்து அவனை அணைத்துக் கொண்டான்.

''கமால் கர்தியா யார்'!''

எல்லாருடைய கை குலுக்கல்களையும் வாழ்த்துக்களையும் புகழ்ச்சியையும் ஏற்றுக் கொள்ளும் வகை தெரியாமல் திணறினுன்.

பிரின்ஸிபால் அவனைக் கூப்பிட்டனுப்பினுர். கருணையுடன் நகைத்து அழுத்தமாகக் கை குலுக்கினுர்.

''இந்தக் கல்லூரிக்கு உன்னால் பெருமை. இன்றைக்குத்தான் நியூஸ் உறுதியாகி வந்தது. நீ யூனிவர்ஸிடியில் மூன்றாவது ராங்க் என்று. ஐ ஆம் வெரி ஹாப்பி. மேலே படிக்கப்போறியா, வேலை பார்க்கப் போறியா?''

''மேலே படிக்க வீட்டில் வசதி யில்லை. வேலைதான் தேட வேண்டும்.''

''லார்ஸன் அண்ட் ட்யூப்ரோவில் ஒரு வேலை இருக்கிறது தயாராய். அவர்கள் உன்னைப்பற்றி விசாரித்தார்கள். இதைப்பார் விளம்பரம். அப்ளை பண்ணு உடனே. நல்ல சம்பளம் ஆரம்பமே.''

அவர் அறையை விட்டு வெளியே வந்து வெகு நேரம் வரையில் அந்த வார்த்தைகள் அவனைத் தொடர்ந்தன. மனசில் திடீரென்று ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும், திருப்பு முனையிலும் திட்டமிட்டாற் போல் வழி காட்டிகள் தோன்றுவது எத்தனை பெரிய அதிசயம்! விஞ்ஞான ரீதியில் இதற்கு எப்படி விளக்கம் தேட முடியும்? ஆனால் இந்தப் புரியாத சக்தியின் மௌனச் செய்கையிலும் தாளம் பிசகாத ஒரு லயம் இருந்தது. எதற்கோ கட்டுப்பட்ட மாதிரி யதேச்சையாக விழுந்த வித்திலிருந்தும் இயற்கை விதிப்படி முளைக்கும் பயிர் போல... பருவத்துக்கு ஏற்பத் துளிர் விட்டு, பூத்து, காய்த்து....

காட்! எப்படிப்பட்ட அமானுஷ்ய சக்தி இது!

''அவனுக்கு இன்ஜினியராப் போகணும்னு தலையில எழுதியிருந்தா அதுக்கு முருகனே வழி பண்ணுவான்!''

அவனுக்கு மறுபடி சிலிர்த்தது. அந்தப் புரியாத அமானுஷ்ய சூழ்ச்சிக்கு அப்பாவின் சுலபமான தர்க்கம் இது... விடை இது...

அவன் வேகமாகக் கேட்டை நோக்கி நடக்கையில் கருப்பு ஃபியட் வந்து அவனருகில் நிதானித்தது.

'ஹாப் இன்!''

சீதா: ''என் குழந்தை அழுதா உடனே டிரான்ஸிஸ்டரை அருகில் வைத்துப் பாட விட்டால் போதும்!''

ராதா: ''பாடலைக் கேட்டதும் குழந்தை அழாதா?''

சீதா: ''இல்லே. அது அழுவது எனக்குக் கேட்காது!''

—இ. கருப்பசாமி



முகம் ஸ்விட்ச் போட்டாற்போல் மகிழ்ந்தது. அவன் தன்னை நிதானித்துக்கொண்டு, ''எதுக்கு தாரா, நான் போய்க்கிறேனே!'' என்றான்.

''கமான்! பிகு பண்ணிக்காதே!''

அவள் முன் பக்கக் கதவைத் திறந்ததும் அவன் பதில் பேசாமல் உள்ளே அமர்ந்தான்.

வண்டி சற்று நகர்ந்ததும், ''கதவைச் சரியாச் சாத்தலை'' என்று குனிந்து அவன் மேல் இடித்தபடி அவள் மீண்டும் சாத்தினதில் ஏதும் விகல்பம் தெரியா விட்டாலும் அவளுடைய உடம்பின் அழுத்தலும் அவளிடமிருந்து வந்த சுகந்தமும் அவனைத் தடுமாறச் செய்தன.

அவள் கொஞ்சம் கூட அலட்டிக்கொள்ளாமல் காரைக் கிளப்பி அவனைப் பார்த்துச் சிரித்து, ''இப்பச் சொல்லு! திருநாகேச்வரம் எப்படி இருந்தது?'' என்றாள்.

திடீரென்று அவனுக்கு ஞாபகம் வந்து மன்னிப்புக் கேட்கிற தொனியில் சொன்னான்:

''மறந்தே போயிட்டேன், ஸாரி, எனக்கு நீ தந்தி அடிச்சதுக்கு ரொம்ப தாங்க்ஸ்!''

''அப்பா! சீக்கிரம் ஒரு விஷயத்துக்கு ரீயாக்ட் பண்றே!''

அது காதில் விழாதவனாய் அவன் தொடர்ந்தான்:

''எனக்கு இன்னும் புரியல்லே தாரா, இதையெல்லாம் நீ எதுக்குப் பண்றேன்னு! உன்னுடைய பொழுதுபோக்குகளோ, அல்லது விளையாட்டுக்களிலே இதுவும் ஒண்ணுன்னா ப்ளீஸ் ஸ்டாப் இட். என்னை அந்தக் கேவலத்துக்கு இறக்காதே....''

அவள் சற்று நேரம் எதுவுமே பேசாமல் வண்டியை ஓட்டினாள். பிறகு மெலிதாகச் சிரித்தபடி கேட்டாள்:

''நான் விளையாடற மாதிரி இருக்கா?''

''எனக்குப் புரியல்லே!''

''வேறே காரணம் இருக்கலாம்னு தோணலியா?''

உணர்ச்சிப் பெருக்கில் அவனுக்குத் தொண்டை வறண்டது.

அவள் பேசும் தமிழ் கொச்சையாக மழலை உச்சரிப்புடன் இருந்தது. ஆங்கில வாடையுடன் விநோதமான இனிமை கலந்திருந்தது.

அவன் பதிலே பேசாமல் பாதையைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான்.

''கார்த்திக், உனக்கு என்னைப் பிடிக்கிறதா?''

வருடுகிற மாதிரி மிருதுவாக ஒலித்தன வார்த்தைகள். மனசு ஒரு முறை குலுங்கிற்று.

''ப்ளீஸ் தாரா, ஸ்டாப் இட்!''

''பிடிக்கிறதா? எனக்குப் பதில் சொல்லு!''

நிலைமையின் அசம்பாவிதத்தில் அவன் சங்கடத்துடன் சிரித்தான்.

''எனக்குப் பிடிக்கிறதுன்னு சொன்னதாலே என்ன அர்த்தமிருக்கப் போகிறது உனக்கு?''

அவள் திடீரென்று வண்டியை ஒரு ஓரமாக நிறுத்தினாள்.

''என்னங்க, இவர் எந்தக் கட்சி சார்பா பேசுவார்னு போடலையே!''

''யார் கண்டது? நாளைக்கு அவர் எந்தக் கட்சியில் இருக்காரோ அந்தக் கட்சி சார்பாகத்தான் பேசுவார்!''

—'பாதுஷா'




''ரொம்ப முக்கியமான அர்த்தம்'' என்றாள் நிதானமாக. ''ஏன்னா, ஐ லவ் யூ!''

குபீரென்று கிளம்பிய உணர்வலைகளை அவன் பிரயாசையுடன் அடக்கி,

''வேண்டாம் தாரா. உனக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லே. நீயும் நானும் நேர் எதிர் துருவங்கள்!'' என்றான்.

''அதுதான் ஒண்ணுக்கொண்ணு ஆகர்ஷிக்கும்னு தெரியாதா?''

அவன் பலமாகத் தலை அசைத்தான். ''வேண்டாம். இது அவ்வளவு சுலபமில்லே.''

அவள் திடீரென்று எரிச்சலுடன் சொன்னாள்.

''நீ சரியான கோழை. எந்தச் சவாலையும் சந்திக்க உனக்குத் தைரியமில்லே!''

மறு விநாடி வேகத்துடன் வண்டியைக் கிளப்பினாள்.

அவன் லேசான கலவரத்துடன் அவளைப் பார்த்தான். அவள் உண்மையிலேயே கோபப்படுபவள் போல் தெரிந்தாள். சிவந்த மிருதுவான உதடுகள் உணர்ச்சி வசப்பட்டிருந்தன. எப்பவும் குறும்பும் மையலும் தெரியும் கண்களில் ஒரு தீவிர பளபளப்புத் தெரிந்தது. அந்த நிறத்தையும் உடம்பையும் பெரிய மனுஷதோரணையையும் கிட்டத்தில்பார்க்கையில் அவன் பேச்சு கேலிக் கூத்தாகப் பட்டது.

அவளைச் சமாதானப்படுத்தும் வகையில் அவன் மெள்ளச் சொன்னான்:

''கோழைத்தனம்னு இதுக்கு அர்த்தம் இல்லே. நான் பிராக்டிகலா இருக்கேன். ஆசைப்படறதையெல்லாம் அடையணும்னு எதிர்பார்க்கலாமா? என் முகத்தைப் பார்த்து, மார்க் லிஸ்டைப் பார்த்து நீ லவ் பண்றேன்னா அது நம்பும்படியா இருக்கா? என்னைப் பத்தி, என் குடும்பத்தைப் பத்தி உனக்கு என்ன தெரியும்?''

''இந்த மாதிரி ஒரு பிடிமானம் ஏற்படறதுக்கு எத்தனை தெரியணுமோ அத்தனை தெரியும்!''

''நான் குருக்கள் பிள்ளை. குடும்பம் ரொம்பப் பழங்காலம். ரொம்ப சிம்பிள்!''

''அதனாலதான் எனக்குப் பிடிக்கிறது. மனசுலே இருக்கிற சுத்தம் கண்ணுலே தெரியறது!''

கடவுளே, நிலைமையை எப்படிச் சமாளிக்கப் போகிறோம்? ஷி இஸ் க்ரேஸி!

ராமகிருஷ்ணபுரத்துக்கு வண்டியைத் திருப்பாமல், இடப்பக்கமாக அவள் ஒடித்தபோது அவன் திகைப்புடன் கேட்டான்:

''எங்கே போறே?''

''என் வீட்டுக்கு. காஃபி சாப்பிட்டுட்டு நீ போகலாம்.''

அவனது மறுப்பை லட்சியம் செய்யாமல் அவள் சிரித்துக் கொண்டே ஓட்டினாள்.

வீடு பெரிதாக, மிக நவீனமாக இருந்தது. வாசலில் மிக ஜாக்கிரதையாகப் பாதுகாத்த புல் தரையும் தோட்டமும் இருந்தன. வீட்டுக்குள் ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் மாதிரி கார்பெட்டும், பித்தளை ஜாடிகளும், சிலைகளும்....

அவன் தரையில் கால் வைக்கவே தயங்கிக் கொண்டு நடந்தான்.

''உட்கார். காஃபிக்குச் சொல்லிட்டு வரேன்'' என்று தாரா உள்ளே ஓடினாள்.

பரதேசத்தில் வந்து மாட்டிக் கொண்டவன் போல அவன் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கையில் சட்டென்று ஏற்பட்ட ஒரு தீர்மானத்தில் அவசரமாக வெளியேறினான். இனம் புரியாத அவமானம் நெஞ்சை வியாபித்தது.

எத்தனை பெரிய பைத்தியக்காரன் நான்! அவள்தான் ஏதோ உளறுகிறாள் என்றால் நமக்குப் புத்தி எங்கே போயிற்று? சுற்றுப்புறத்து உணர்வே இல்லாமல் அவன் தனக்குள் பொங்கிய உணர்ச்சிக் கொந்தளிப்பில் மூழ்கியவனாய் நடக்கையில் பின்னால் வெகு வேகமாய் ஓடிவந்து மூச்சிரைக்க எதிரே நின்று தாரா அவன் கையைப் பிடித்தாள்.

''கார்த்திக், ஏன் கிளம்பிட்டே?''

அவன் அவள் கையை அசுரத்தனத்தோடு விலக்கினான்.

''ஸாரி, தாரா! உனக்கும் எனக்கும் ரொம்ப வித்தியாசம்.''

''டோன்ட் பீ ஸ்டுபிட்!'' என்றாள் அவள் சற்று பலத்த குரலில். ''என்ன காம்ப்ளெக்ஸ் உனக்கு? குருக்கள் பிள்ளைங்கிறதிலே உனக்கென்ன அவமானம்? உன்னை உனக்காக எனக்குப் பிடிக்கிறது. அது உனக்கு முக்கியமில்லையா?'' என்றாள்.

கண்ணில் நீர் பளபளத்தது. அவன் சட்டென்று நெகிழ்ந்து போனான்.

இவள் இப்போது நிச்சயம் விளையாடவில்லை. இதுவரை கட்டாயமாக அவன் அடக்கி வைத்திருந்த உணர்வலைகள் கட்டுக்கடங்காமல் பொங்கிற்று.

''நீ ஜெயித்தாய்'' என்ற புன்சிரிப்புடன் ''ஸாரி அண்ட் தாங்க்யூ!'' என்று அவளுடன் நடந்தான்.

அவன் வாழ்வில் அவன் சந்திக்கும் திருப்புமுனைகளில் இதுவும் ஒன்றாக இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. (தொடரும்)




**எ**ன் அருமை மனைவி கமலாவுக்கு உள்ள எத்தனையோ நல்ல வழக்கங்களில் ஒன்று, தினமும் என்னைக் கேட்டு, எனக்கு இஷ்டமான சமையலைச் செய்வது. அதே சமயம் அவளுக்கு இஷ்டமான சமையலாகவும் அது அமைந்து விடும். எப்படி?

நேற்றுக் காலை நடந்த சம்பாஷணையை அப்படியே தருகிறேன். கமலாவின் 'நோ-ஹௌ'வை யாவரும் தெரிந்து கொள்ளட்டும்!

**“எ**ன்னு, உங்களைத்தானே. இன்னிக்கு என்ன சமையல் செய்யட்டும். வீட்டில் கத்தரிக்காய்தான் இருக்குது. கூட்டு செய்யட்டுமா?''

''கூட்டா கமலா... வேண்டாம். எண்ணெய்க் கத்தரிக்காய் குழம்பு செய்யேன்.''

''எண்ணெய்க் கத்தரிக்காய் குழம்புதானே, செய்துடறேன். ஆனால் ஒண்ணு, அப்புறம் 'எங்கம்மா செய்யற மாதிரி இல்லே' அப்படி இப்படின்னு ஆடக் கூடாது.''

''வாயைத் திறக்காமல் சாப்பிடறேன்!''

''இல்லே. இப்படித்தான் சொல்லுவீங்க, அப்புறம் ஆயிரம் நங்கு நடிப்பீங்க... எண்ணெய்க் குழம்பு சமாசாரமே வேண்டாம்.''

''அப்படியானால் கத்தரிக்காயைச் சுட்டுப் புளி மசியல் செய்யேன்.''

''ஐயோ மசக்கையே! கேஸ் அடுப்புலே கத்தரிக்காயைச் சுட முடியுமா? அதற்குக் கரி அடுப்பு வேணும். வருஷத்திலே ஒரு நாள் கத்தரிக்காயைச் சுடுவதற்கு நான் கரி அடுப்பையும் ஒரு மூட்டை கரியையும் கட்டிக் காப்பாத்த வேண்டுமா?... உங்க அக்காதான் இன்னும் கரி அடுப்பை வெச்சுண்டு இருக்கா... ஆயிரம் சம்பாதிச்சாலும் கேஸ் அடுப்பு வாங்க அவளுக்கு மனசு வராது.....அக்கா கிட்டே சீராடப் போகும் போது தினமும் சுட்டு மசியல் பண்ணிச் சாப்பிட்டுவிட்டு வாங்க....''

''போகட்டும் கமலா, பொடி போட்டுக் கறி பண்ணிடு. அட்டகாசமாய் இருக்கும்.''

''வீட்டைத் தலைகீழாத் திருப்பினால்கூட ஒரு பிடி தனியா கிடையாது. நானும் நாலு நாளாகத் தனியா வாங்கிண்டு வாங்கோன்னு கத்திண்டு இருக்கேன். தனியா, சேர்ந்தானு பேத்தல் சிலேடை ஜோக் அடிச்சுண்டு மசமசன்னு உட்கார்ந்துண்டு இருந்தால் எப்படி பொடி போட்டுக் கறி பண்றது?''

''இப்போ என்னைக் கடைக்குத் துரத்தாதே கமலா... அப்போ, கத்தரிக்காயை வெறுமனே வதக்கி வச்சுடு.''

''வெறும் வதக்கல்தானே. ஆகா, பண்ணிடறேன். ஆனால் உங்கள் பொண்ணு இருக்காளே, ராங்கிக்காரி வாயிலே வெக்க மாட்டாள். நறுக்கா இலையிலேருந்து ஒதுக்கிடுவா... இந்தப் பிடிவாதமெல்லாம் அப்படியே உங்கம்மாதான். கல்யாணம் ஆன புதுசுலே இப்படித்தான் வதக்கலை உங்க அம்மா இலையிலே போட்டுட்டேன், அப்படியே விஷம் மாதிரி அதை ஒதுக்கி வெச்சுட்டதும் இல்லாம, ஒரு 'பாட்டு' வேற பாடினாளே, எத்தனை வருஷமானாலும் மறக்குமா? அப்போ உங்கம்மா பாடினாள்... இப்போ உங்க பொண்ணு பாடுவா... தாராளமா வதக்கல் பண்றேன், பாட்டைக் கேட்கணும்னு என் தலையிலே எழுதியிருந்தால் அதை எந்த ரப்பராலும் அழிக்க முடியாது.''

## கடுகு

''இதுக்காக ஏன் கண்ணைக் கசக்கறே, கமலா... கத்தரிக்காய் போட்டு மோர்க் குழம்பு பண்ணிவிடு.''

''ஐயோ... இந்த மனுஷருக்கு வர்ர யோசனையைப் போய் யாரிடம் சொல்வேன்! நேத்துச் சாயங்காலம் உங்க ஆபீஸ் பிரண்ட்லை இழுத்துண்டு வந்து காப்பி போடச் சொன்னீங்க... அதனால் நேத்து பால் ஷார்ட்... தயிர் தோய்க்கவே இல்லே. சாப்பிடறதுக்கே மோர், ஒன்ஸ்மோர்தான்! இந்த அழகில் மோர்க்குழம்பு தயிர்ப் பச்சடி என்று சொல்றீங்க...!''

''விடு கமலா ரஸவாங்கி பண்ணிடேன்''

''கோலி குண்டு சைஸ்லே கத்தரிக்காய் வாங்கிண்டு வந்திருக்கீங்க. நீள கத்தரிக்காயில்தான் பண்ண முடியும் குண்டு கத்தரிக்காயில் பண்ணால் வாயில் வைக்க வழங்காது! எனக்கென்ன பண்ணிடறேன்...''

''ரஸவாங்கி வேண்டாம் கமலா கத்தரிக்காய்க் கூட்டு பண்ணிடு''

''கத்தரிக்காய் கூட்டா... உம். உங்க இஷ்டப்படியே கத்தரிக்காய் கூட்டு பண்றேன். உங்களுக்குப் பிடிச்சதைப் பண்றதை விட எனக்கு வேறு என்ன வேலை?''

**இ**ப்படியாக நேற்று காலை ''என்'' (அதாவது கமலாவின்) இஷ்டப்படியே கத்தரிக்காய் கூட்டு செய்தாள் கமலா!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

# வாழ்க்கையில் சுவைகள் பல— அவற்றில் மிக இனிமையானது ரஸ்னா!

அது மிகவும் சுலபம். ஒரு குழந்தைகூட அந்த தந்திரத்தைச் செய்துகாட்டலாம். நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் சர்க்கரை மற்றும் நீருடன் ரஸ்னாவைக் கலக்குங்கள். நிமிடங்களில் பானம் தயார். 32 டம்ளர் சுவைமிக்க குளிர்பானம் தயாரிக்க 2 பாட்டில்கள் சிரப் போதும். இதை இதர எந்த சிரப்/ஸ்குவாஷ் உடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றவைகளைவிட ரஸ்னாவுக்கு பாதி விலைதான் ஆகிறது என்பதை உணர்வீர்கள்.




## ரஸ்னா

சாஃப்ட் ட்ரிங்க் கான்ஸன்ட்ரேட்

**சுவையானது!**
**சிக்கனமானது!**

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ். அசர்வா, அஹமதாபாத் 380 016.

இவ்விடங்களிலும் கிடைக்கிறது: குவைத், துபாய், பஹ்ரின், மொரீஷியஸ், கெய்ரோ, கார்டூம், ஜூபாகா, நெய்ரோபி, ஜெத்தா, ஓமன், லண்டன்.

ஃபேன்களுக்கு புகழ்பெற்ற
3 பெயர்கள் உண்டு,
அவற்றில் ஒன்று-
இதர ஃபேன்களைவிட
30% மின் சக்திச்
செலவு குறைவு.

அதன் பெயர் கேதான்.

புதிய கேதான் பிரிமியம் தனித்தரமுள்ள ஃபேன். அது. ஃபேன் தொழில் நுட்பத்தில் வியப்பூட்டும் தடைவென்ற சாதனை—அதனை, கேதான் ஆய்வு மற்றும் அபிவிருத்திப் பிரிவு வல்லுனர்கள் மட்டுமே அடைந்திட முடியும்.

ஆகவே, இதர ஃபேன்கள் வழங்கிடாத தனிச்சிறப்பம்சங்களை கொண்டுள்ளது அது. 30% மின்சக்தி செலவு குறைவாகச் செலவாகும் ஃபேன் அது மட்டுமே. அதாவது மின் கட்டணத்தில் 10 ரூபாய் மிச்சம்... மாதாமாதம்...

அதே நேரத்தில், 10% அதிக காற்று வீச்சு வழங்குகிறது.

அது மட்டுமே ஐஎஸ்ஐ மார்க்குடன் கூடிய ஃபேன் ஆகும்.

# கேதான்

தனித் தரமுள்ள ஃபேன்